(இ - ள்.) மனமே சுகவனநாதர் மலைச்சாரலில் இந்த நாயகியானவள் நான் வாசனைபொருந்திய பூமெத்தையிற் பலவந்தமாகச் சேர்த்தாலும் உடனே முதுகுகாட்டிப் படுக்கின்றனள், பின் உனக்கு நானடிமையென்று சொல்லிவணங்கிக்கொண்டாலுந் தாடனஞ்செய்கின்றனள் அப்பாலுபசரித்து விடியுமட்டும் விசிறிவீசினாலும் என்னை மிரட்டுகின்றனள், இவளெண்ணமெவ்விதமோ தெரிகிலேனே எ-று. (௩க)

சேட்டாகனிட்டாதிபேதங்களுடம்
இலக்கணமும்.

சேட்டைகனிட்டைகளெனவிதந்திணைமுதன்மூவரினுந்திகழ்வரோர்சார், வேட்டவனாலன்புமிககாளசேட்டையதுசிறிதுபெற்றமின் கனிட்டை, காட்டிவாதீராசேட்டைகனிட்டையதீராசேட்டைகனிட்டைமற்றும், வாட்டமிலாதீராதீராசேட்டைகனிட்டையென்றுவகுக்குங்காலே.

(இ - ள்.) ஈண்டுக்கூறியதீரை அதீரை தீராதீரையென்னு மூவருள்ளும் ஓரோவழிச்சேட்டை கனிட்டையெனப்பவர் பிரகாசிப்பர். சேட்டையென்பவள் கணவனாலதிக சிநேகத்தைப் பெற்றவள், கனிட்டையென்பவள் கொஞ்சச்சிநேகத்தைப் பெற்றவள். வகுத்துச்சொல்லுங்கால் தீராசேட்டை கனிட்டை, அதீராசேட்டைகனிட்டை, தீராதீராசேட்டைகனிட்டை, யென வழங்குவதொன்று சொல்வர் புலவர் எ-று.

இவை முதன்மூன்று பேதங்களினுஞ் சேட்டைகனிட்டைகள் சேரவே மத்தியதீராசேட்டைகனிட்டை, மத்தியாதீராசேட்டாகனிட்டை, மத்தியதீராதீராசேட்டாகனிட்டை, பிரபுடதீராசேட்டாகனிட்டை, பிரபுடாதீராசேட்டாகனிட்டை, பிரபுடதீராதீராசேட்டாகனிட்டை எனப்பெருகும். சேட்டைகனிட்டையென்னும் பெயர்களை வடநூலார் ஜேஷ்டாகனிஷ்டா யென்பர். ()

தீராசேட்டைகனிட்டைகளுக் கிலக்கியம்.
கவிக்கூற்று.

இருபாலிருவருறவணையொன்றினிணங்கியபோ
தொருமான்முகங்காட்டுறங்குனரொப்பமற்றோர்மயிலி
னருகேபுரண்டொலியின்றித்துகிலையவிழ்த்துமெல்ல
விருதோனெழுப்பினன்சேலசுகவனர்வெற்பிடத்தே.

(இ - ள்.) சேலமாநகரில் எழுந்தருளிய சுகவனநாதர் மலைச்சாரிலில் வெற்றிமிகுந்த வொருநாயகன் தன்னிருபுறத்திலும் இரண்டு நாயகிகள் பொருந்த வொருபடுக்கையில் இணங்கியபோது ஒருநாயகி நிறையமுகங்காட்டி து

ங்கிறவர்களைப்போல் விழித்துக்கொண்டிருக்க வதுகண்டு மற்றொரு நாயகி யின் அருகேபுரண்டு படுத்துச் சத்தமில்லாமற் சேலைமுடியை யவிழ்த்துக்கொண்டு அவளை மெள்ள வெழுப்பினன் எ-று.

இவர்களிற் பயிரியமிருந்தமையால் திராசேட்டைகனிட்டைகளாயினர்.

அதிராசேட்டைகனிட்டைகளுக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

அருத்தியைத்தான்வெளியாக்காதிருமனையாட்டிகளி
லொருத்தியைப்பூவுக்கனுப்பிச்சற்றேயிமைக்குள்ளகன்ற
கருத்தினைக்காட்டுமுகத்தெழின்மற்றொருகன்னிதனைத்
திருத்தியசோலையிற்சேர்ந்தான்சுகவனசேலமன்னே.

(இ - ள்.) சுகவனநாதா சேலமாநகரில் ஒருநாயகன் இரண்டுநாயகிகளோடு கூடிவிளையாடும்போது தனது விருப்பத்தை வெளியாக்காமல், ஒரு நாயகியை பூவெடுத்துக்கொண்டு வரும்படி யனுப்பிவிட்டுச் சிறிது திறந்தகண்களாற் றனதெண்ணத்தைக்காட்டினாற் முகவிலாசத்தையுடைய மற்றொருநாயகியைத் திருத்தியுண்டாக்கத்தக்க வச்சோலையினிடத்திற் கூடினன் எ-று.

இவர்களிற் பயிரியமில்லாமையைக் காண்க. (௩௪)

திராதிராசேட்டைகனிட்டைகளுக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

இருமட்டவார்சினக்தோர்பாலுறக்கண்டிணக்குதற்குப்
பருமணியாரமொருத்திகைமேல்வைத்தப்பின்பின்மற்றோர்
பொருவிலபெண்கையில் வைக்கும்போதக்கைதொடலபோல்விலக்கித்
திருமுலைதொட்டுமகிழ்ந்தான்சுகவனர்சேலமன்னே.

(இ - ள்.) சுகவனநாதா சேலமாநகரில் ஒருநாயகன் தனது இரண்டு நாயகிகளுந் தன்மேற்கோபங்கொண்டு ஓரிடத்திலிருக்கக்கண்டு தானந்த நாயகிகளைச் சமாதானஞ் செய்யும்பொருட்டுப் பருத்தரத்தினமாலிகையை யொருத்தி கைமேல்வைத்துப் பின்னுமப்படியே யொருரத்னமாலிகையை யொப்பில்லாத மற்றொருத்திகைமேல் வைக்கும்போது அவள்கையைத் தொடுவதுபோல் அந்தக்கையைச் சற்றேவிலக்கி யழகியதனங்களைத் தீண்டி மகிழ்ந்தான் எ-று.

இவர்களிற் பயிரியமிருந்து மிராமை காண்க. (௩௫)

க - வது மலர் முற்றும்.

பரகீயாபேதங்களு மவ்விலக்கணங்களும்.

கருதுபரகீயைதனிற்கன்னிகைபரோடையெனக்காட்டும்பேத
மிருவகைகன்னிகைதந்தைதாய்முதலோர்க்கடங்கிமணவிசைதன்னை
யொருவருமங்கறியாமலொளிப்பவளாம் பரோடைமணந்துளகேள்வ
ற்கு, வெருவிமுனமெடுத்துரைத்த மெல்லியலேபோன்றிருக்குமின்
னுமன்றே.

(இ - ள்.) மேற்குறித்த பரகீயையிற் கன்னிகையென்றும் பரோடையென்றும் இருவிதபேதங்கள் காட்டப்படும்; கன்னிகையென்பவள் தந்தைதாய முதலானவர்களுக்கடங்கித் தனது மணவிருப்பத்தை யொருவருமறியாமலொளிக்கு நாயகியேயாம்; பரோடையென்பவள் தன்னை விவாகஞ்செய்துகொண்ட கணவனுக்குப் பயந்து முன்னே யெடுத்துச்சொல்லிய கன்னிகைபோலவே மணவிருப்பத்தை மறைத்துக்கொண்டிருக்கு நாயகியேயாம் எ-று.

கன்னிகை பரோடையென்னும் பெயர்களை வடநூலார் கன்னிகா பரோடாவென வழங்குவர். (௩௬)

கன்னிகாநாயகிக் கிலக்கியம்.

கலிக்கூற்று.

புருவவிற்கோட்டிநகட்டுங்கணைநீட்டிப்புனைகழுத்தின்
குருமணித்தாமமுன்றுடைப்புயத்தைக்குழைதழுவத்
திருவிரற்காதிறசெறித்துசுகவனர்சேலமதிற்
பருமுலைக்கோமின்சிரித்தோரகதோர்செல்வற்பார்த்தனளே.

(இ - ள்.) சுகவனநாதர் சேலமாநகரிற் பருத்த தனங்களையுடைய வோரிராஜகன்னிகை தனது புருவமாகிய வில்லைவளைத்துக் கண்களாகிய பாணங்களைக் கூர்மைசெய்துகொண்டு அலங்கரிக்கப்பட்ட கழுத்திலுள்ள நிறமிக்க ரத்னாபரணங்கள் முன்னே துவண்டசையவுங் காதணிகள்புயத்தைப் பொருந்தவுமிருந்து அழகிய சிறுவிரலைக் காதிலமைத்துப் புன்சிரிப்புடனே யங்கே யோரமாக வொரு சீமானைப்பார்த்தனள் எ-று. (௩௭)

பரோடாநாயகிக் கிலக்கியம்.

நாயகிதானே யெண்ணியது.

இந்தக்குரிசிலழகென்மனங்கவர்ந்திட்டதந்தோ
சந்தச்சிலைமன்மதனிவனேயிவன்றன்னைநண்ணிச்
சொந்தக்கணவனறியாதெவ்வாறுசுகிப்பனியான்
பந்தசுகவனர்நாட்டெளியேன்செய்தபாவமென்னே.

(இ - ள்.) அன்பு நிறைந்த சுகவனநாதர் நாட்டில் இந்த நாயகனது பேரழகெனமனத்தைக் கொள்ளையிட்டுக்கொண்டதையோ, இந்நாயகனோ நிறமிகுந்த வில்லேந்திய மன்மதனுவான, இவனையடுத்த நானென்னது சொந்தநாயகனறியாதிருக்கும்படி யெவ்விதத்திறசுகிக்கப்போகின்றேன; இந்தனம வருந்த முன்னமே யேழையாகிய நான் என்ன பாவஞ்செய்தேன எ-று. (௩௮)

பரகீயையினுட் பிரிவுகள.

வேறு.

குத்தைவிதத்தையிலக்கிதைவெங்குலடையனுசயானையினே
டொத்தமுதிதைசாகசிகையுலையாப்பிரதிபாசதுரை
தத்தையனையவபலாபசதுரைமுதற்பேதம்பலமுன்
வைத்தபரகீயையிலவழங்கிவருமென்றுணாத்தும்வடநூலே.

(இ - ள்.) முன்னமே சொல்லிவந்த பரகீயையிற குத்தையென்றும், விதத்தையென்றும், இலக்கிதையென்றும், (விருப்பமிகுந்த) குலடையென்றும், அனுசயானையென்றும், (பொருந்திய) முதிதையென்றுஞ், சாகசிகையென்றுங், (கெடாத) பிரதிபாசதுரையென்றுங, (கிளிபோன்ற) அபலாபசதுரையென்றுந தொகுப்பட்ட பலபேதங்களும் வழங்கிவரும் என்று வடநூலறிவிக்கும் எ-று.

மேற்சொல்லிய பெயர்களை வடநூலார், குபதா, விதக்தா, லக்ஷிதா, குலடா, அனுசயானு, முதிதா, சாஹசிகா, ப்ரதிபாசதுரா, அபலாப சதுரா வெனவழங்குவர். (௩௯)

குத்தையின்பேதங்கள்.

விட்டமறைக்கவல்லகுத்தைவிருத்தசுரதகோபனைமேல்
வடிவுமிகுத்தவருத்தீசமாணசுரதகோபனைவெங்
குடிலவிருத்தவருத்தீசமாணசுரதகோபனையென்
றுடையதிறத்தின்முப்பேதமுறும்பின்விவரித்துரைசெய்வாம்.

(இ - ள்.) தனது கிரியாகாரியங்களை மறைக்கவல்லவளாகிய அந்தக்குத்தையானவள், விருத்தசுரத கோபனையென்றும், (மேனிவடிவுமிகுந்த) வருத்தீசமாண சுரதகோபனையென்றுங், (கொடிய வஞ்சனையையுடைய) விருத்தவருத்தீசமாணசுரதகோபனையென்றுஞ் சொல்லப்பட்ட மூன்று பேதங்களையுந் தனக்குரிய குணகாரணத்தால் அடைவள், இனி விவரித்துச்சொல்வோம் எ-று.

இப்பெயர்களை வடநூலார் வ்ருத்தசுரதகோபனு, வர்த்திஷ்யமாண சுரதகோபனு, வ்ருத்தவர்த்திஷ்யமாண சுரதகோபனுவெனவழங்குவர். (௪0)

### அபபேதங்களினிலக்கணம்.

நடந்தகலவிதனைமறைக்குநங்கைகுடமூநாணவிம்மி
மிடைந்தசுகந்தகளபமூலைவிருத்தசுரதகோபனைபின்
றொடர்ந்துநடப்பதாகியவத்தூயகிரீடைதொழிலொளிக்கு
மடந்தையடுத்தவருத்தீசமாணசுரதகோபனையே.

(இ - ள்.) கும்பங்களும் (வெள்கும்படி பருத்து நெருங்கிய பரிமளகளப நத்திரந்த முலைகளையுடைய) விருத்தசுரத கோபனையென்பவள் நடந்துவிட்ட கலவியைமறைக்கின்ற நாயகியேயாம். இவளுக்கடுத்த வருத்தீசமாண சுரத கோபனையென்பவள் பின்னேதொடுத்து நடப்பதாகிய (குற்றமற்ற) கிரீடை தொழிலை மறைக்கின்ற நாயகியேயாம் எ-று. (௬௧)

### இதுவுமது.

முந்தநடந்தகலவியும்பின்முயன்றுநடக்குங்கலவியுமங்
கெந்தமனிதர்க்குந்தெரியாதிருக்கமறைக்குமேந்திழையாள்
வந்தவிருத்தவருத்தீசமாணசுரதகோபனையென்
றந்தவடநூலவகுத்திடுமற்றவர்பண்பினையுமறிவிப்பாம்.

(இ - ள்.) தொகையிடவந்த விருத்தவருத்தீசமாண சுரதகோபனையென்பவள் முன்னே நடந்துவிட்டகலவியையும் பின்னேமுயற்சியால் நடக்குங் கலவியையும் அங்கே யெவ்வகைப்பட்ட மனிதர்களுக்குந் தெரியாதிருக்கும் படி மறைக்கின்ற நாயகியேயாமென்று அழகிய வடநூல்சொல்லும், ஏனையருடைய இலக்கணங்களையும் இனியறிவிப்போம் எ-று. (௬௨)

### குத்தாபேதத்திரிவிதநாயகிகளுக்கு மிலக்கியம்.

கலிக்கூற்று.

அத்தைவெறுக்கினும்பாங்கிகடிறினுமல்லவர்மற்
றெத்தனையுரைக்கினும்பள்ளிபுகேனின்றெலியனைசார்
கத்திநகவெருகென்செய்யுமோசற்றுங்கண்பொருந்தா
தொத்தினிதென்றனன்மெய்போற்சுகவனசூர்வஞ்சியே.

(இ-ள்.) சுகவனநாதர்தலத்தில் வஞ்சனையாலுயர்ந்த நாயகி யென்னை யத்தைகோபித்தாலுஞ் சகிகள் தூறுசெய்தாலும் மற்றெல்லோரும் எவ்வித நிந்தையைச் சொன்னாலும் நானிப்போது படுக்கைவீட்டிற்குள் போகமாட்டேன், ஏனெனில் அங்கே யெலியனையின் சமீபத்திற் காத்துக்கொண்டிருக்கிற கத்திப்போன்ற நகங்களையுடைய பூனை யின்று என்னை யென்னசெய்யுமோ சிறிதாயினுஞ் சம்மதித்து இனிதாக வெனதுகண்பொருந்தி நித்திரைவராதென்று மெய்போற் பெரிய பொய்யைச்சொல்லினள் எ-று. (௬௩)

### விதத்தையினிலக்கணமும்பேதங்களும் அவ்விலக்கணங்களும்.

சமையவுசிதசாதுரிய சமர்த்தியவிதத்தையாமவட்குட், கமை யில்வாக்குவிதத்தையென்றுங் கயற்கட்கிரியா விதத்தையென்று, ம மையுமிருபான் முன்னவள்சொல்லதனுன் மேறகாட்டமைநீயுளாள், சிமைய மூலேப்பின்னவடொழிலாற் றிறமன்னறுபெற்றுடுபவளே.

(இ - ள்.) விதத்தையெனபவள் சமயோசித சாதுரிய சாமர்த்தியமிருந்த நாயகியாம; அவட்குட் (பொறுமையில்லாத) வாக்குவிதத்தையென்றுங் (கெண்டைபோன்ற கண்களையுடைய) கிரியாவித்தையென்றும் இரண்டு பேதங்களுண்டு; முன்னமேசொன்ன வாக்குவிதத்தை யெனபவள் மேற்குறித்த சாமர்த்திய வன்மைகளைத் தனது வார்த்தையால் காட்டுகின்ற நாயகியாம; பின்னேசொன்ன (மலைநிகாத்த முலைகளையுடைய) கிரியாவித்தை யெனபவள் அந்தச்சாமர்த்தியங்களைத் தனது தொழில்களால் காட்டுந்தன்மையைப் பெற்றிருக்கு நாயகியாம் எ-று.

இப்பெயர்களை வடநூலார் வாக்விதக்தா க்ரியாவிதக்தா வென்பர். (௪௪)

### வாக்குவிதத்தாநாயகிக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

செங்கதிர்பொங்கப்பலபூவுமவாசனைசெய்யுமந்தத்
துங்கநிகுகட்பொழிலவிலகாமற்சுரங்கருதித்
தங்கவழிச்செல்பவனவேண்டுவதுதகுந்ததன்றோ
வெங்கள்சுகவனாவெற்பினென்றோபெண்ணியமயினளே.

(இ - ள்.) ஒரு நாயகி யெமது சுகவனநாதர் மலைச்சாரலில் சூரியன் சிவந்து பிரகாசிக்கப் பலவிதபுட்பங்களு மலர்ந்து அதிகவாசனையை வீசுகின்ற அந்த ஆற்றங்கரைச்சோலையை வழிபோகுகன விட்டு விலகாமல இன்பமனுபவிக்க நினைத்து அவ்விடத்தே வசிப்பதற்கு விரும்புவது தகுந்ததாக விருக்கின்றதன்றோ வென்றுதானே சொல்லினள் எ-று.

சூரியன சிவந்து பிரகாசிக்கவென்றது அந்திநேரத்தைக்காட்டி நின்றது.

### கிரியாவிதத்தாநாயகிக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

பனிநாளிலந்தைப்பழத்திற்குச்செல்வதுபண்பலவென்
றினிதாமனைக்கறிவித்தத்தருவைவெட்டென்னவொரு
தனியாளைநாயகனேவக்குடாரந்தனைக்கிணற்று
ளனிநீரிலிட்டுமறைத்தாள்சுகவனர்நாட்டவளே.

(இ - ள்.) சுகவனநாதர் நாட்டிலே ஒரு நாயகன் தன்மனைவியை நோக்கி நீயிந்தப் பனிகாலத்தில் அடிக்கடி யிலந்தைப்பழத்திற்காகச் செல்வது சரியல்லவென்று உபசாரத்தோடறிவித்து அப்பாலந்த இலந்தைமரத்தை வெட்டிவிடென்று ஓராளையேவியபோது அந்த நாயகி வீட்டிலிருந்த கோடாலியை நிறைந்த நீரையுடைய கிணற்றிற் கொண்டுபோய்ப்போட்டு மறைத்துவிட்டனள் எ-று. (௬௬)

இலக்கிதை குலடையென்னு நாயகிகளின்

இலக்கணம்.

வேறு.

ஒளிப்பறுதனதுசெய்கைபுலகிலெல்லோருங்காண
வெளிப்படையாக்கிக்கொண்டமின்னிலக்கிதையாமென்பர்
களிப்பொடுகுலவரயபுகடந்துசேர்ந்துழலுங்காமி
துளிப்புயலிடிக்குமஞ்சாத்துணிவுடைக்குலடையாமே.

(இ - ள்.) இலக்கிதையென்பவள் இரகசியமற்ற தனது கிரியைகளைப் பூமியின்கணெல்லோரும் அறியும்படி வெளியாக்கிக்கொண்ட நாயகியேயாமென்று சொல்லுவருயாந்தோர், (துளிக்கின்றமேகத்தின் இடிக்கும் பயப்படாத கொடுந்துணிவையுடைய) குலடையென்பவள் மனச்செருக்குடனே ஜாதிமார்க்கத்தை விடுத்துந் தனவீட்டைவிட்டுப் புறஞ்சென்றும் அன்னியனைக் கூடித்திரிகின்ற பெருங்காமியாகிய நாயகியேயாம் எ-று. (௬௭)

இலக்கிதாநாயகிக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

இதுவரையாகியதாகியதேமறுமினிச்செயப்போ
மதுவுமுறுதிநடக்கின்றதுந்தவருதுசிகுப்
பதுமதியின்மைகுரூரத்திலென்னபலன்சொலென்றாள்
விதுமுகநண்பனைநோக்கிச்சுகவனாவெற்பொர்மின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரலில் ஒரு நாயகி சந்திரனையொத்த முகத்தையுடைய தனது கணவனை நோக்கி இதுவரைநடந்த காரியம் நடந்தேபோயிற்றன்றே, இனிமேற்செய்யப்போம் காரியமும் உறுதியாகவே நிறைவேறும், இப்போது நடக்கின்றகாரியமு நிற்கமாட்டாது நீயென்னை வீணிற்கோபிப்பது புத்தியில்லாமைதான், இந்தக்குரூரத்தாலுனக்கென்ன பிரயோசனமுண்டாகப்போகிறதென்று சற்று மதிப்பின்றிச் சொல்லினள் எ-று. (௬௮)

குலடாநாயகிக் கிலக்கியம்.
கலிக்கூறறு.

மிகுமழைபெய்யுமுகில்பலபுல்விளைவிக்குமலை
தொகுகனிகாட்டுந்தருக்களவ்வாறுதுணைவர்நல்கத
தகுவனவோவெம்பொருட்டென்னநீபடைத்தாயெனத்தே
னகுமலரோனைவெறுத்தாள்சுகவனர்நாட்டொர்மின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் நாட்டில் ஒரு நாயகி தேன்பொருந்தி விளங்கா நின்ற கமலாசனத்திலிருக்கும பிரமனைநோக்கி நீ மேகஙகளையும் மலைகளையும் விருக்ஷங்களையும் சிருட்டித்திருக்கின்றாயே, அவைகளாலென்ன பிரயோசனம், மேகங்கள் அதிகமழையைமாத்திரம்பெய்யும், மலைகள் பலபுறகளையும் விளையச்செய்யும், விருக்ஷங்கள் அநேக பலஙகளைக்காட்டும, இவையன்றி அநகப்படி புருஷர்களைக் கொடுக்கமாட்டா அல்லவா ஆதலால் என்னைப்போலிருப்பவர்கள் பொருட்டாக எனனபடைத்தாயென்று மிகவுநொந்து வெறுத்தாள் எ-று. (௬௯)

அனுசயானநாயகியின
இலக்கணம.

தாங்களுற்றிடுசங்கேதத்தலமதுதவறியேனு
மாங்கதற்பின்வேண்டுஞ்சார்பமையுமோவமையாதோவென்
றேங்கல்பெற்றேனுமுன்சென்றிருப்பனோவென்னோகோனப்
பாங்கருக்கென்றேனும்புண்படுபவளனுசயானே.

(இ - ள்.) அனுசயானையென்பவள் தானும் அன்பனும் வழக்கப்படி பொருந்துகின்ற சங்கேதத்தலந் தவறிவிட்டதினாலாலும் பின்பு குறிககுஞ் சங்கேதத்தலம் நமக்குக்கிடைக்குமோ கிடையாதோவென்ற சந்தேகத்தினாலாலும் தான் ஒரு சங்கேதத்தலததிற்குப்போவ தன்முன்னமே தனதனபன அவ்விடத்திற்குப் போயிருப்பானோ எப்படியோவெனறாலும மனவருததப்படுகின்ற நாயகியேயாம் எ-று. (௭௦)

அனுசயானநாயகிக் கிலக்கியங்கள்.
பாஙகிககூறறு.

வன்னவசந்தம்புகவிலவங்கவலலிப்புதரின்
பன்னமுதிர்ந்தனபார்த்தலுங்கண்புனல்பாய்ந்தவன்றி
யென்னலமுங்கொள்சுகவனர்வெற்பிவளெண்ணமென்னோ
மின்னனுவும்பனையோலையைப்போலவெளுத்தனவே.

(இ - ள்.) அழகிய வசந்தகாலம் வந்ததால் இலவங்கக்கொடிகளாலுண்டான புதரின் இலைகளெல்லாம் உதிர்ந்தன, அவைகளைப்பார்த்தவுடனே எவ்வித தன்மைகளையுங் கொண்டருளிய சுகவனநாதர் மலைச்சாரலில் இந்த நாயகிகண்கள் இரண்டும் நீரையொழுகவிட்டன, பிரகாசித்த கபோலங்களும் பனையோலைபோல் வெளுத்தன, இவளகருத்தேதோ தெரியவில்லை எ-று.

இது வழக்கபயடி பொருந்துகின்ற சங்கேதத்தலம் தவறியது. (ருக)

இதுவுமது.

நாயகிக்குச சகிசொல்லியது.

வருந்தேலிருககைமருவினியன்பன்மனைப்புறத்திற்
பெருந்தேரிரவிகதிரும்புகாதிளமபேடையொடு
திருந்தோர்மயிலுறங்கத்தழைக்கும்பலதேம்பொழிலக
ளிருந்தேயுளவென்சுகவனநாதாவெற்பேந்திழையே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரலில் ஆபரணங்களைத் தரித்தபெண்ணே நீ மனதுவருந்தாதே இனியுனதிருபபிடத்தைப் போய்ச்சேர் அந்த நாயகனவீட்டின் புறவாசலிற் பெருமைதங்கிய தேரையுடைய சூரியனது கிரணங்களும பிரவேசிப்பதறகு இடையினறி திருந்தியவழகுமிகுந்த மயிற்கூட்டங்கள இளமையாகிய பேடைகளோடு கூடி யேகாந்தமாக உறங்கும்படி தழைக்கினற வாசனைநிறைநத பலசோலைகளிருந்தேயுளளன, ஆதலால் உனக்கென்னகுறை எ-று.

இது பின்பு குறிக்குஞ் சங்கேதத்தலங்கிடைக்குமோ கிடையாதோ வென்றெண்ணியது. (ருஉ)

இ து வு ம து.

கவிககூறறு.

விழிபுனல்பாயவிமையாதுநிற்குமவ்வேளைதனி
லெழில்புனைசணபகங்காதில்வைத்துககனியேந்தியன்பன்
வழிவரநோக்கினளந்தோசுகவனர்மால்வரையிற்
பொழிமதுமாலைப்புரிகுழற்பூண்முலைப்பூங்கொடியே.

(இ - ள்.) சுகவனநாதர் பெருமைதங்கிய மலைச்சாரிலே தேன்சிந்துகினற மாலையை யணிந்துகட்டிய கூந்தலையும் ஆபரணங்கணிறைந்த முலைகளையுமுடைய பூங்கொடிபோனற வொரு நாயகி தனதுபிரியனைக்கருதி இரண்டு கண்களினும நீர்பெருகியோட இமையாமல் எதிர்பார்த்துக்கொண்டு நிற்குஞ் சமயததில அந்தநாயகன் அழகைத்தரித்த சண்பகமலரைத் தனதுகாதிற் சொருகி பலகனிகளையுங் கையிலேந்திக்கொண டந்தவழியூடேவரவவனைக் கண்டனளையோ எ-று.

இது சங்கேதத் தலத்திற்குத் தான் போகுமுன் பிரியன் போயிருப்பானோ வெப்படியோவென்று வருந்தியது. (ருங)

முதிதை சாகசிகை பிரதிபாசத்துரை
யென்னு நாயகிகளிலக்கணம்.

வேறு.

பையவினைவின்படிக்கமைவுபார்த்துமகிழ்கூடபவள் முதிதை
செய்யமுடியாககாரியமுஞ்செய்யத்துணிவாள் சாகசிகை
வெய்யதனதுசொல்லையவ்வவ்வேளைக்கிசைந்தவிதமாற்றுந்
தையல்பிரதிபாசத்துரையென்பர்வடநூற்சான்றோரே.

(இ - ள்.) முதிதையென்பவள் மெள்ளச் சன்றெண்ணப்படி சமயவமைவு கிடைக்கக்கண்டு சந்தோஷிக்கின்ற நாயகியேயாம், சாகசிகையென்பவள் செய்யமுடியாத காரியங்களையுஞ் செய்வதற்குத் துணிகின்ற நாயகியேயாம், பிரதிபாசத்துரையென்பவள் கொடிய தனது வார்த்தைகளை அவ்வவ்வேளைக்குத்தக்கந்தபடி மாற்றுகின்ற நாயகியேயாமென்று வடநூலறிஞர் சொல்லுவர் எ-று. (ருச)

முதிதாநாயகிக்கிலக்கியம்.

கலிக்கூற்று.

முதுமாமன்மாமிகண்ணில்லார்நாத்திமுழுச்செவிடு
சதுரானநாயகனூர்க்கேகினனென்னைத்தகாங்குத்தி
யிதுவேயென்றோபதிகற்கோங்கிக்கொங்கையெழுநெகிழ்த்தாள்
புதுவார்சுகவனாவெற்பினண்மேனிபுளகிக்கவே.

(இ - ள்.) சுகவனநாதா மலைச்சாரலில் ஒருநாயகி வழிச்செல்பவனாகிய வொருவனைநோக்கி யென்னுடைய கிழமாமனும் மாமியுங் கண்ணில்லாதவர்கள் இந்நாத்தியோ முழுத்தச் செவிடானவள் வலிமைசங்கிய சொந்தக்கணவனோ அயலூர்க்குப் போயிருக்கின்றான் ஆதலால் எனக்காப்பதற்கு இதுவே நல்லசமயமென்று சொல்லிக்கொண்டு சரீரம்புளகிக்கவும் முலைகள் பூரிக்கவும் அடுத்த ரவிக்கைமுடியை யவிழ்த்தாள் எ-று. (ருரு)

சாகசிகாநாயகிக்கிலக்கியம்

கலிக்கூற்று.

என்விழிகட்டுனைக்காண்பனென்றங்ஙனுற்றேபிடித்து
நின்விழிகட்டுவனென்னைப்பிடியென்னேயபதி
தன்விழிகட்டிச்சுகவனர்நாட்டத்திவிடனைப்
பின்விழியாணில்விற்கூய்த்துயத்தாளொருபெண்கொடியே

(இ - ள்.) சுகவனநாதர்நாட்டிற் பூங்கொடிபோன்ற வொருநாயகி சந்திரிகையில் விளையாடும்போது தனது கணவனைநோக்கி நீ யென்னுடைய கண்ணைக்கட்டு நானுனைப்பிடிப்பேனென்று அவனு லப்படிக்கட்டப்பட்டு அவனை பபிடித்தபின யானுனது கண்களைக்கட்டுகிறேன நீ யெனனைப்பிடியென்று அந்தபிரியனுடைய கண்களைச கட்டிவிட்டு அப்போதேதான கணசாடையால ஒருவிடனையழைத்துச் சோநதாள் எ-று. (ருகூ)

பிரதிபாசதுராநாயகிகிலக்ஷயம்.

கவிக்கூற்று.

மதிருவியாற்றைக்குடங்கொடுநீந்துழிவள்விரலா
லெதிர்மாமுதலைதள்ளிப்போய்த்துய்த்தேனவனின்பமெனுந்
ததிகோன்சகியுருக்கொண்டுற்றதோராந்திக்தகைக்கனவு
விதியோகண்டேனென்றுரைத்தாள்சுகவனாவெற்பொராமின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சார்பி லொருநாயகியானவள சகியைப் போலே தனதுகணவன் மாறுவேடம்பூண்டு வநதிருக்கச் சகியெனநேசம்பி பெண்ணே நான் இந்தக்கோட்டையைததாண்டி அநநதியை யொருகுடங் கொண்டு நீநதுகையிற குறுகிட பெரியமுதலையைக்கூரிய விரலாற் றள்ளிவிட்டு அக்கரைசார்நது அநதப்பிரியனுடையவின்பத்தை யனுபவிததேனென்று சொல்லிக்கொணடு வரும்போதே கணவன் மாறுவேடம்பூண் டிருப்பதைத்தெரிந்து எனதுவிதியோ விப்படிப்பட்ட சொறபனங்கணடேனென்றுசொன்னுள் எ-று. (ருஎ)

அபலாபசதுராநாயகியினிலக்கணம்.

மிக்கமோசவார்த்தைகளைவேளைதெரிந்துவிரித்துரைத்துந்
துக்கநீடியவள்போலசசும்மாவழுதுஞ்சொந்தநண்பன்
பக்கமேவிவேண்டிநிற்கும்படியேயுபாயம்பாராட்டத்
தக்கபாவையபலாபசதுரையெனுமிச்சகதலமே.

(இ - ள்.) அபலாப சதுரையென்பவளமிகுந்த மோசவார்த்தைகளைச் சமயமறிநது சொல்லியும் விசனமதிகரிததவள்போலப் பொய்யாக வழுதுந் தனது சொநதக்கணவன் தன்னருகில்வநது உபசரிதது வேண்டிக்கொள்ளும்படி யுபாயஞ்செய்யத் தகுந்த நாயகியேயா மென்றிந்த வுலகஞ்சொல்லும் எ-று. (ருஅ)

அபலாபசதுராநாயகிக்கிலக்கியம்.

சுகவனரூர்மின்னிருட்கரந்தன்னியற்றேய்ந்திடக்கான்
புகவுருமாற்றிவந்தான்கோனவனெப்புல்லியபழிந்
திகழ்திருடாகிற்பிடிக்கநிதந்திரிந்தேன்கிடைத்தாய்
மிகவெளியாச்சுன்பண்பென்றழுதாள்பதிவேண்டினனே.

(இ - ள்.) சுகவனநாதர்நகரில் ஒருநாயகி யொருவருக்குந் தெரியாமல் இருளிலேமறைந்து பரபுருடனைக்கூடுவதற்கெண்ணி யொருசோலையிற் பிரவேசித்தாள் அப்போதவளுடைய கணவனும் மாறுவேடமபூண்டங்கேவந்தான அவனையநதச் சோரபுருடனென்று சோந்து பினபு கணவனெனபதையறிந்து யாவராலும் நிந்திககப்பட்ட திருடாவுன்னைப் பிடிப்பதறகே நானநுதினம் அலைந்து கொண்டிருநதேன் இனறு அகப்பட்டாய் உனது குட்டெல்லாம் மிகவும் வெளியாயிற்றென்றழுதனள் அதுகண்ட கணவன வேணடாமென்று உபசரிததான் எ-று. (ருக)

சாமானியையினுட் பிரிவும.
அவ்விலக்கணமும.

ஆங்குமொழிசாமானியைக்குளாகந்துகசாமானியையென்
றோங்குபவளுண்டொருத்தியன்றொளுரியகணவற்குப்பயந்து
தீங்குசிலநாண்மறைந்தியற்றிதகேர்ந்துபின்புவெளிச்சென்று
பாங்குபெறுநாட்டினிற்புகியபரத்தையாகும்பழிபயினளே.

(இ - ள்.) முன்னமேசொலலிய சாமானியைக்குள் ஆகந்துகசாமானியை யென்றொருத்தியுண்டு; அவளெத்தனமையளோ வெனிற றனதுகணவனுககஞ்சி யிரகசியமாகச் சிலகாலம் வீட்டிலிருநதுகொண்டே துன்மார்ககத்தினடந்து பின்பு தேறி வெளியேறி வளமைபெற்ற நல்லநாட்டிறபுகுநது நூதனவேசையாயிருக்குங் குறறமுடையவளே எ-று. (கூ0)

ஆகநதுகசாமான்யாநாயகிக் கிலக்கியம்.
நாயகியெணணியது.

அன்பற்கடங்கிமறைவாயிதுவளாயன்னியர்பா
லின்பத்தினைச்சுகித்தேனித்தனைதொரட்டென்னவினித்
துன்பப்படாவிலைமாதர்தெருவடுத்துத்தெளிந்து
தென்பச்சுகவனர்வெற்பிற்சதானந்தந்தேடுவனே.

(இ - ள்.) யானிது காலவரை கணவனுக்குப்பயநதே மறைவாகப் பரபுருடர்களைக்கூடி யின்பஞ்சுகித்திருநதேன் இத்தனைபாடென்ன இனிவருததப

படாத விலைமாதர் நெருவிலடுத்து மனந்தேறி யதிகதெனபாக அடதச்சுகவன நாதா மலேசசாரபி லெபபோது மானநதத்தைச் சம்பாதிப்பேன எ-று. (௬௧)

பதின்றுவிதநாயகிகள்வருமாறு.

வேறு.

மாதருக்குண்மத்தியைநற்பிரகற்பையென்றவிருவருந்தீராதீ
பேதவர்க்கத்தறுவர்களாய்ப்பின்சேட்டாகனிட்டாதிபேதநண்ணி
யேதமற்றவியலபினிற்பன்னிருவர்களாய் முத்தையைச்சேர்த்தெண்
ணவன்னோர், பூதலததின்மீதுபதின் மூவகையராவரின்னம்புகல்கிற்
பேமால்.

(இ - ள்.) பெண்களுக்குள்ளே மத்தியை பிரகறபையென்ற விருவர்களுந தீரா அதீரா தீராதீராயெனும் பேதங்களாலாறுவகையராகி யப்பாற சேட்டைகனிட்டையென்னும் பேதஙகளைச்சார்ந்து குறறமறற குணமுடைய பன்னிருவகையராகி முனனின்ற முத்தையையும் உடனகூட்டியெண்ண அவர்கள் பூமியினகண்ணே பதின்மூவராவார்கள் இனனமுஞ சொலலுவோம் எ-று.

இதுவுமது.

பரகீயைவ்வகையிலிருவருமொருசாமானியையும்பகர்ந்துபோந்த
தரமேவுபதின்மூவர்தமிறபொருந்தவிருமருங்குந்தருக்கியோடி
யரநேருமதர்விழிநாயகிகள்பதினறுவர்களாயமைவாரென்ன
மரபாகவடமொழிநாவலரெவருமினிதுணரவகுத்தாரன்றே.

(இ - ள்.) பரகீயாபேதத்தி லிருவரும் ஒருசாமானியையும் மேலே சொல்லிவநத பக்குவதநதையுடைய பதினமூவர்களிற பொருந்தவே (இருபக்கங்களினுங் காதுவரைதாவிச்செனறு அரத்தை நிகாத்த மதாத்தகண்களையுடைய) நாயகிகள் பதினறுபோகளாய் அமைவார்களென்று முறையாகப் பூர்வகிரநதகர்த்தர்களெலலோரும இனிதாக வறியும்படி சொனனார்கள் எ-று. (௬௨)

கந்தமலிமலரிரண்டாற் பதின்மூப்பேதகளபதனசுவீயையிலக்கணமுமன்றிப, பந்தமுளவிருவகையாய்வழங்காநின்றபரகீயையிலக்கணமும்பணங்கைக்கொண்டு, பிந்தமருவுறுமொருசாமானியைக்குப்பெற்றவிலக்கணமுமற்றைப்பிரிவுஞ்சொன்னு, மிநதவிதநாயகிகளெனுமூவர்க்குமிசைந்த பொதுக்குணங்களைமேலெடுத்துச்சொல்வாம்.

(இ - ள்.) வாசனைமிகுந்த விரண்டு புட்பங்களாலே பதின்மூன்று பேதங்களையுடைய (களபநதிமிர்ந்த முலைபெற்ற) சுவீயையினது இலக்கணத்தை

யும் அழகுள்ள விருபேதங்களையடைந்து வழங்கிவருகின்ற பரகீயையினது இலக்கணத்தையும் யாவரிடத்தினும் பணத்தைக் கைப்பற்றிக்கொண்டபின் சேர்வதற்கிசையும் ஒரு சாமானியைக்குரிய விலக்கணத்தையும் மற்றைப் பிரிவுகளையும் இதுவரையிற் சொன்னோம் இனியிந்தத் திரிவிதநாயகிகளுக்குஞ் சம்பந்தமான பொதுக்குணங்களை யெடுத்து விவரிப்போம் எ-று. (௫௩)

உத்தமாதிகுணநாயகிகளின் பேதமும்.

அவ்விலக்கணமும்.

உயர்பிரியநாயகிகள்குணபேதத்தா லுத்தமமத்திமவதமவொழு
ங்கேயவ்வப், பெயர்பெறுவருத்தமநாயகிதன்கேள்வன்பிழைசெயினு
ந்தானிதமேபேணிச்செய்வா, ளயர்வரியமத்திமநாயகிமற்றன்னோ
டுத்தேநின்றவைசெயினுமவையேசெய்வா, டயரதமநாயகிநன்னல
ஞ்செய்தாலுந்துணிந்ததுதீங்கெனவெகுளுந்தோகையாமே.

(இ-ள்.) (உயர்ந்த பிரியத்தைத்தரும்) திரிவிதநாயகிகளுங் குணபேதங்களாலே வுத்தமநாயகி மத்திமநாயகி அதமநாயகியென முறையேபெயர் பெறுவார்கள்; அவர்களுள் உத்தமநாயகியென்பவள் தனது கணவன் குற்றத்தைச்செய்தாலுந் தான் விரும்பி இதமேசெய்கின்றவள், (மெலிவில்லாத) மத்திமநாயகியென்பவள் அக்கணவன் நன்மைசெய்தால் தானுநன்மையேசெய்து தீமைசெய்தால் தானுந்தீமையேசெய்து வருபவள், (துன்பத்தையுடைய) அதமநாயகியென்பவள் தன்கணவன் நன்மைகளையே செய்தாலும் அவற்றைத் தீமைகளாகவே பாவித்துக் கோபிக்கின்றவள் எ-று. (௫௪)

உத்தமநாயகிக்கிலக்கியம்

கவிக்கூற்று.

மறுமான்முலைக்குறிமார்பொடுநேர்மணவாளனைக்கண்
டுறுமூரலாஞ்சந்தனமபூசிநோக்கெனுமூற்பலத்தாற்
சிறுகாமலர்சசித்தின்சொற்பனிநீர்தெளித்தேவியப்ப
நறுநேயவேடிக்கைசெய்தாள்சுகவனர்நாட்டணங்கே.

(இ-ள்.) சுகவனநாதர்நாட்டில் ஒருநாயகியானவள் வேறொருமாதினுடைய முலைக்குறிமார்பிற் றோன்றவந்த தன்னுநாயகனைக்கண்டு நிலவுற்ற சிரிப்பாகிய சந்தனத்தை யவன்மேற்பூசிக் கண்களாகிய நீலோற்பலமலர்களாற் குறையாமற் பூசைசெய்து வுபசாரவசனங்களாகிய பனிநீரைத்தெளித்து அதிசயமுண்டாகும்படி நல்லபிரியத்தோடு இப்படி யொருவேடிக்கையைச் செய்தனள் எ-று. (௫௫)

மத்திமநாயகிக்கிலக்கியம்.

கலித்துறை.

பிழைத்துந்துணிந்துகுழலகோதிக்கோன்சுகம்பேணிநண்ணக்
குழைக்குஞ்சினக்கட்கணையாலொதுங்கச்செய்தாளவன்பின்
குழைக்குறுசொற்கொண்டிடைநீக்கச்சுகவனர்குன்றவள்பொன்
னிழைக்கும்பணித்தன்னுடற்கற்பகக்கொடியெய்ந்தனளே

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரலி லொருநாயகியானவள் தனதுநாயகன் தனக்குக்குற்றஞ் செய்திருந்தும் அதையோசியாமலும் பயமில்லாமலுந் துணிந்துவந்து தன்கூந்தலைக்கோதிச் சரசஞ்செய்யவிரும்பி அடுக்கவுடனே தழைந்த கோபத்தையுடைய கண்களாகிய பாணங்களினால் அவனை விலகச் செய்தனள். பின்னும் அவன்மனத்தை யுருக்கத்தக்க வுபசாரவசனங்களைச் சொல்லிக்கொண்டு சேலையை மெல்லநெகிழ்க்கவே பொன்னாலிழைத்த ஆபரணங்களை யணிந்த தன்சரீரமாகிய கற்பகக்கொடியை அந்நாயகி தன்னாயகனுக்குத் தானமாகக்கொடுத்தாள் எ-று. (௬௬)

அதமநாயகிக்கிலக்கியம்

தலைவியைநோக்கிச் சகிசொல்லியது.

கதிராலுடல்வருந்தும்பொடியாற்பதங்கன்றுமிற்கென்
றெதிராதாமரையைக்குடையாவெடுத்துமண்ணைநகுமண
முதிராநீர்தெளிக்கும்பதியைச்சுகவனமூர்த்திவெற்பிற்
கொதிவேலெனச்செங்கண்கொண்டுமிரட்டலென்கோமளமே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சார்பில் சூரியகிரணங்களாலே உனக்கு மேனிவருந்துமென்றும் பொடியாலே கால்கள் கன்றிவிடுமென்றும் எண்ணி யெதிராகத் தாமரைப்பூவைக்குடையாக வெடுத்துப் பிடித்தும் தரைமுழுதும் வாசனைமுதிர்ந்த பனிநீர் முதலியவைகளைத்தெளித்தும் உபசரித்துக்கொண்டு வருகின்ற உன்னாயகனை இளமைப்பூசையுடைய பெண்ணே நீ உலையிற்காய்ந்த வேலைப்போற்சிவந்த கண்களைக்கொண்டு அடிக்கடிமிரட்டுவதென்ன சொல்வாய் எ-று. (௬௮)

மேலேசொல்லியநாயகிகளுக்குத்
திருக்காந்தபேதங்களும் அவ்விலக்கணங்களும்
வேறு.

திருந்துமிவரோதிருத்தையதிருத்தையொடு திருத்தாதிருத்தை
யென்னப், பொருந்துவராற்கலவிசெயும் பொழுததனிற்றிருத்தியுற்ற
பூவையன்னாள், வருந்தரியதிருத்தையுருள் திருத்தையுற்றுமுறுவடி

**வேற்கண்ணி, மூருந்தனையமூறுவபிளமூலத்திருத்தாதிருத்தையென்**
**பர்மூதுநூல்வல்லோர்.**

(இ - ள்.) திருந்திய விநநாயகிகளே கிரீடாசமயத்தில் திருத்தையென்றும், அதிருத்தையென்றும், திருத்தாதிருத்தையென்றும், திரிவிதபேதங்களைப் பொருந்துவார்கள்; அவர்களில் (வருந்துதலில்லாத) திருத்தையென்பவள் அந்தக் கிரீடையினாலே திருத்தியடைந்த (நாகணவாய்ப்புட்போன்ற மொழிகளையுடைய) நாயகியாம்; அதிருத்தையென்பவள் அங்ஙனந் திருத்தியடையாத நாயகியாம்; (மயிலிறகின் அடிக்குருத்தைநிகர்த்த பற்களையும், இளமை தங்கிய தனங்களையுமுடைய) திருத்தாதிருத்தையென்பவள் அக்கிரீடையாலே திருத்தியடைந்தும் அடையாதவள்போலிருக்கின்ற (கூரிய வேலையொத்த கண்களையுடைய) நாயகியாமென்று பூர்வ கிரந்தகர்த்தாக்கள்சொல்வார் எ-று.

இப்பெயர்களை வடநூலார் த்ரிப்தா, அத்ரிப்தா, த்ரிப்தாத்ரிப்தா வென்பர். (௬௯)

திருத்தாநாயகிக்கிலக்கியம்.
நாயகன் பாங்கனொடு சொல்லியது.

**இளைத்தேன்மிகவுநிற்கேநானடிமையென்றின்பவெள்ளங்**
**திளைத்தேதளரத்தழுவிக்குதலைசெழித்தபலாச**
**சுளைத்தேனெனப்பலசொல்வாளைக்கூடிச்சுரதவகை**
**விளைத்தேனெனக்கெதிருண்டோசுகவனர்வெற்பிடத்தே.**

(இ - ள்.) கிரீடாசமயத்தி லென்னைநோக்கி யிக்கலவியால யான்மிகவும் அலுத்துப்போனேன், உனக்கே நான் அடிமையென்று அந்த வின்பக்கடலிலழுந்திமிதந்து தளர என்னைத்தழுவிக்கொண்டு செழித்துப பழுத்தபலாக்கனிச சுளையினது தேன்போலினிக்கப் பலதுதி வசனங்களைச்சொல்லும் அந்நாயகியைச் சுகவனநாதர் மலைச்சாரில யான்கூடி அநேககலவிகளை நடத்தினேன் எனக் கிணையானவர்கள் வேறே யிவ்வுலகிலுண்டோ எ-று. (௭௦)

அதிருத்தாநாயகிக்கிலக்கியம்.
நாயகன் பாங்கனொடு சொல்லியது.

**மார்பைப்படிக்கடிதட்டிப்புட்போற்கத்திவைதுகிள்ளிப்**
**பார்வையினாற்றெடையாலெசசரிக்கையணிச்சிரிப்பை**
**நேர்விபரீதப்படுத்தலுத்தும்பின்னெடிதிழுத்துச்**
**சேர்வளிவளைவெல்வாரார்சுகவனர்சேலத்திலே.**

(இ - ள்.) சுகவனநாதர் சேலமாநகரி லிந்தநாயகி கிரீடாகாலத்தில் அடிக்கடி மார்பைத்தட்டியும் மாடப்புறாவைப்போற கத்தியும் வந்தபடி திட்டியும்

நகங்களாலே கிள்ளியும் சண்களாலுந தொடைகளாலுஞ் சைகைசெய்து அடிசகடி யெச்சரித்தும விபரீதமாக ஸேசிரித்தும் என்னைவருத்தி யென்றலே நடத்தப்பட்ட கலவியால் அலுகநபபோயும பினனுமெனனைப் பலவந்தமாக விழுந்துகொணடு சேருவள இவளை யார சுரததால வெல்லவலலவர்கள் எ-று. (எக)

திருசகாகருகதா நாயகிககிலககியம்.
நாயகனபாஙகனெருடுசொலலியது.

கனிவாய்முறைமுறையோங்கித்தன்கூந்தல்கலைந்தசையத்
தனிமாமலர்குழைநதென்னவெண்மாரபினிற்சாய்ந்துநிலவி
தினிதாமினிக்கொஞ்சமேமேலமென்றேசொலுமேந்திழையைத்
தொனிகூர்கலவியிலவென்றேன்சுகவனர்சோலையிலே.

(இ - ள்.) கிரீடாகாலததில அதிக மனக்களிவோடு வரவர அத்தொழிலால் உயர்ந்து தனது கூந்தலவிழுந்து அசைய பெருமைதஙகிய வொருபூ வதங்கியதுபோல துவண்டு எனமாரபிலசாயந்து நிலலுநிலலு இந்தச் சுரதமிகவும் இனிதேயாயினும இனிககொஞ்சம எனமேலே நீயேறிக கலவிசெய்யெனறு சொல்லுகினற அநதநாயகியை சுகவனநாதர்மலைப் பூஞ்சோலையின்கண்ணே ஆபரணஙகளெல்லாம ஒலிகரும்படி நடததும ஆக்கலவியிலுல் யான வெனறேன எ-று. (எஉ)

இனனுமந்த நாயகிகளுக்கு திவ்வியாதிபேதங்
களும் அவ்விலககணஙகளும.

மின்னுறழுநுண்ணிடைநாயகிகண்மற்ருேர் விதத்தாற்றிவ்வியை
யுங்கன்ன, வின்னுரைசொலதிவ்வியையுந்திவ்வியாதிவ்வியையுமென
முப்பேத, மன்னுவானுள்ளவடிவ்வியையலலாளதிவ்வியைமுன்வா
னுளாளாய்ப், பின்னுலகிலவருபவளேதிவ்வியாதிவ்வியையாம்பிரிக
குங்காலே.

(இ - ள்.) (மின்னற்கொடிபோன்ற சிறிய இடையினையுடைய) அநநாயகிகள் மறறொரு காரணத்தாலே திவ்வியையெனறும், (கரும்பினுமினிய சொற்களைச் சொல்லுகின்ற) அதிவ்வியையெனறும், திவ்வியாதிவ்வியையென்றும் வகுக்கப்பட்ட மூனறு பேதங்களையும் பொருநதுவார்கள்; பிரித்துச்சொல்லுங் காலத்தில் திவ்வியையெனபவள் தேவருலகததிருககும் நாயகி; அதிவ்வியையென்பவள் அதுவலலாத வுலகத்திருக்கும் நாயகி; திவ்வியாதிவ்வியையென்பவள் முன்னமே தேவருலகத்திருந்தவளாய் அப்பால் யாதேனு மொருகாரணத்தால் அதுவல்லாத வுலகத்தில வநது பிறநதிருக்கும் நாயகியாம் எ-று.

இப்பெயர்களை வடநூலார் திவ்யா அதிவ்யா திவ்யாதிவ்யாவென்பர். ()

திவ்வியாதிபேதமூன்றனுக்குமிலக்கியம்

கவிக்கூற்று.

சசிமுதலோர்சந்திரமதியாதியர்தாரளக
வுசிதசனகியுருக்குமணியுள்ளிட்டோரொருங்கு
கசிவுறுமன்பிற்சுகவனநாதங்கருதியன்பே
சுசிபெறுகத்தங்கருத்தின்படிச்சின்மாத்துய்த்தனரோ

(இ-ள்) தேவருலகத்திருக்கும் இந்திராணி முதலிய தெய்வநாயகிகளும் பூமியின்கண்ணிருக்குஞ் சந்திரமதி முதலிய மானுடநாயகிகளும் முன்னே தேவருலகத்திருந்து ஒருகாரணத்தால் பூமியிற்பிறந்து மானிடவடிவாகக் காட்சியையும் ஆசாரத்தையுமுடைய சீதை உருக்குமணி முதலிய தெய்வமானுடநாயகிகளுங் கனிந்த பத்தியுடனே சுகவனநாதர் திருவடிகளைத் தியானிக்கையினாலே பரிசுத்தத்தையைப் பெற்றார்கள் தங்கள் தங்களெண்ணப்படியினப்பத்தை யடையப்பெற்றிருந்தார்கள் எ-று

அன்றியும் வேறு வேறு காட்டுதும். (௭௪)

திவ்வியநாயகிக்கிலக்கியம்.

தலைவனெண்ணியது.

அடியாதிசேடன்முடி மேற்படிபடியாதுவிழி
நெடிதோவியத்தலர்பங்கேருகத்தனதங்கர்த்திலங்க
வடிவாலராமவிருணீக்கித்தோன்றும்பிமாகெவளோ
பொடிபூசுமேனிச்சுகவனநாதர்பொருப்பிடத்தே

திருநீறணிந்த ஞானசொரூபத்தையுடைய சுகவனநாதர் மலைச்சாரிலே ஆதிசேடனது பணமகுடங்களின்மேலன்றாகப் பூமியின்கண்ணே தன்பாதங்களைப்படாமலுங் கண்கள் மிகவுஞ் சித்திரத்திலேயெழுதிய தாமரைமலர்களைப்போல விரிதல்குவிதலின்றிப் பிரகாசிக்கவும் அழகினகாந்தியாலே சோலையிருளைத்துரத்தி யிப்போது தோன்றுகின்ற இந்தப்பெண் எவளோ தெரியக்கூடவில்லை எ-று. (௭௫)

அதிவ்வியநாயகிக்கிலக்கியம்

தலைவனெண்ணியது.

மயலாலுளத்துளவாட்டத்தைக்கூந்தன்மலருணர்த்தக்
கயலாயபார்வையெதிர்நதோர்றிவைக்கவாந்துவிட
புயலூர்சுகவனர்வெற்பிற்பொலியுமிப்பூவைதன
தியலோமயிலசொற்செயலோகுயிலசிறறிடையிலலையே.

(இ-ள்.) விரகத்தினாலே மனத்திலுண்டாகிய வாட்டமித்தன்மைத்தென்று தனது கூந்தலிற்சூடிய மலர்களுமவாடிப் பிறர்களுக்குத் தெரியக்கா

டைம கொண்டைமீனகளையொத்த கண்கள் எதிரே வருகின்றவர்களுடைய புகத்தையக் கொள்ளையிட்டு உட்கொள்வனபோலமுடிப பின்னத்தை வெளியே விடுவனபோற திறக்கவுஞ சுகவனநாதரது மேகஙகள் தவழாநின்ற மலைச்சாரபிறபொலிநதுதோனறு மிநதப்பெண்ணினுடைய சாயலோ மயிலையொக்குஞ சொறகளின செயகையோ குயிலையொக்குஞ சிறிய இடையொன்றுமாததிரமிலலை எ-று. (௭௬)

திவ்வியாதிவ்வியாநாயகிக்கிலக்கியம்.

தலைவனெண்ணியது

நரகன்னியாக்குளொருகன்னியாயநடுநண்ணினுமுற
சுரகன்னியேயிவளநூலிலககணநதொக்கமையால
வரகன்னியல்லளெனினிக்கருணைமகிமையுணடோ
சிரகன்னிநாதாசுகவனவெற்பிறநிகைக்குநேரசே

(இ - ள) சிரசிலே கஙகாதேவியைத் தரித்தவராகிய சுகவனநாதா மலைசசாரபிற சந்தேகித்துத திகைக்கின்றமனமே! இநதப்பெண பூலோகமாதா கூட்டத்தில ஒருத்தியாக நடுவேபொருநதினுளேனும, இவள முறபிறப்பிலே தெய்வ கன்னியேயாம, ஏனெனில அததெய்வ கன்னிகளுக்கு குரிய நூலிறசொலலப்படும, இலக்கணஙகளெல்லாம் கூடியிருக்கின்றமையாலே தான, அன்றியுமிவள அப்படித தெய்வகன்னிகையலலளாயின இவளிடத்தே யிவ்வித காருண்யமும பெருநதனமையும வருமோ எ-று. (௭௭)

பின்னுமநநாயகிகளுக்கு

அன்னியசமபோகதுக்கிதாதிபேதஙகளும

அன்னியாசமபோகதுக்கிதையினது இலக்கணமும.

மறறுமவரன்னியாசமபோகதுக்கிதைவினமதனேஙகசசென
றெறறுவிழிவக்ரோததிகருவிதைநனமானவதியெனவுநாம
மூறறிடுவரன்னியாசமபோகதுக்கிதைபின்னொருததிதனனைப
பற்றிசைதனபதிபுணாநதபரிசுணாநதுதுக்கிக்கும்பாவையாமே.

(இ - ள.) பின்னுமநத நாயகிகள அன்னியசம்போகதுக்கிதையென்றும (விலலேநதிய மனமதனும பயப்படுமபடி தாவிமோதுகின்ற கண்களையுடைய) வக்ரோததிகருவிதையென்றும (நன்மையையுடைய) மானவதியென்றும நாமபேதஙகளை யடைவார்கள. அன்னியசமபோகதுக்கிதையெனபவள வேறேயொரு நாயகியை யணபிசைநத தனது கணவனகூடிய தனமையையறிநது விசனப்படும நாயகியாம எ-று.

இப்பெயர்களை வடநூலார அன்யசமபோகதுக்கிதா வக்ரோகத்திகாவிதாவெனபா. (௭௮)

அனனியசம்போகதுக்கிதைக் கிலக்கியம்.
தலைவிசகியை வினவுதல.

தருக்ககலாதசகியேசுகவனார்தஞ்சிலம்பின்
மருக்கமழ்பூம்பொழிற்கேகினையோவன்றிவாய்மைமன
வுருக்கமிலான்மனையுறறனையோவுன்னுடலிலெங்கு
மூருக்கமலரணியுண்டாகியதென்மொழிகுவையே.

(இ - ள்.) நீங்காத மனக்களிப்பையுடைய சகியே! நீ சுகவனநாதர் மலைச் சாரிபில் வாசனைவீசுகின்ற பூஞ்சோலைககுபபோயிருந்தனையோ, அலலது சத்தியமும் மனவிரக்கமுமிலலாத அந்தப்பாவியினுடைய வீட்டுககுப்போயிருந்தனையோ, யுனது சரீரமெஙகுமே முருககம்பூ வாபரணமுண்டாயிருககுங் காரணமென்ன சொலவாய எ-று. (எகூ)

வக்ரோத்திகருவிதையின பேதங்களும்
அவவிலக்கணஙகளும.

விதித்துளவக்ரோத்திகருவிதைககுளுயர்பிரேமகருவிதைகும்பம்போற், கதித்தமூலைச்சவுந்தரியகருவிதையென்றிருவகைதன்கணவனேய,மதித்துமதர்த்திடுமடந்தைபிரேமகருவிதைதனதுவடிவின்பொற்பா, லுதித்தசெருககினளந்தசவுந்தரியகருவிதையென்றுணர்த்து நூலே.

(இ - ள்.) விதித்திருந்த வக்ரோத்திகருவிதைக்குள (உயர்ந்த) பிரேமகருவிதையென்றும் (குடஙகளைப்போல்வளர்ந்தமுலைகளையுடைய) சவுந்தரியகருவிதையென்றும் இரண்டு பேதங்களுணடு; பிரேமகருவிதையெனபவள் தனது நாயகன் தன்னிடத்துவைதத பிரியத்தைககுறித்துக் கருவமடையுநாயகி; அந்தச்சவுந்தரிய கருவிதையென்பவள் தனது சரீரவழகினாலுண்டாகிய கருவமுடைய நாயகியென்று வடநூலறிவிககும எ - று.

இப்பெயர்களை வடநூலார் பரோமகர்விதா சௌநதர்ய கர்விதாவெனபர.

பிரேமகருவிதாநாயகிக் கிலக்கியம்.
தலைவிசகியொடு சொல்லியது.

மாமிபொறுமையென்னுமென்கண்சாடைவழித்திரும்புஞ்
சாமியெனக்குத்தருமணிப்பூண்கடராமலிரான்
பூமியிலேனையர்போதனையாற்றப்பிப்போவதுண்டோ
தேமலர்சோலைச்சுகவனர்வெற்பிற்செழுங்குயிலே.

(இ - ள்.) சுகவனநாதரது வாசனைபொருந்தி விளங்குஞ்சோலைசூழ்ந்த மலைச்சாரிபில் வசிக்கின்ற செழியகுயில்போலுஞ் சகியே! எனதுமாமியாள்

கொண்டபொறுமையா லென்னவாகும் என்கண்சாடைகண்டு அந்தவழியிலே திரும்புகின்ற எனது நாயகன் எனக்குத்தகுந்த ரத்நாபரணங்களைக் கொடாமலிருக்கமாட்டான் அன்றியு மிவ்வுலகி லென்னிருடைய போதனையினாலே யென்மேலவனவைத்த பிரியந்தவறிப்போவதுண்டோ வொருபோதுமில்லை எ-று. (௮௧)

சவுந்தரியகருவிதாநாயகிக் கிலக்கியம்
தலைவிசகியொடுசொல்லியது.

வழுவற்றமோகத்தெளிவேயின்னீள்கண்வனசங்கை
முழுமுத்துவாயமுதந்தனஞ் செப்பென்றென்முற்றுடிக்கும்
கொழுநற்குநானென்னசொலவேன்சொல்லாவிடிற்குற்றமன்றோ
செழுமைசுகவனர்வெற்பூடுலாவியசித்திரமே.

(இ - ள்.) அழகிய சுகவனநாதா மலைச்சாரிற் சித்திரம்போ லுலாவுகின்ற சகியே! என்னைப்பார்த்து நின்றந்த மோகத்தெளிவே உனதுநெடியகண்கள் செந்தாமரை மலர்களோ, பற்கள் முழு முத்துக்களோ, வார்த்தையமிர்தமே, தனங்கள் சிமிழ்களோவென்று கொண்டாடி யெனக்கு எதிரோதுகிகும் என்னுடைய நாயகனுக்கு நானென்ன பிரத்யுத்தரஞ்சொல்லுவேன், அங்ஙனஞ்சொல்லாம லத்தனங்களை யங்கீகரித்துக் கொண்டிருந்தாலது குற்றமாக முடியுமன்றோ எ-று. (௮௨).

மானவதியின்பேதங்கள்.

மானவதிமானமிக்காண்மணவாளனபராதமதிகதேயந்தக்
கானளகமயிலவெளியிறகாட்டுசெய்கைமானமதுகருதுங்காலே
யீனமறுகுருமானமிணங்கியமத்தியமானமிலகுமான
மானவகையாலொருமூன்றா மவற்றினியல்பையினியறிவிப்போமால்.

(இ - ள்.) மானவதியென்பவள் மானமிகுந்தவளேயாம், அந்த (வாசனை பொருந்திய கூந்தலையுடைய) நாயகியானவள் தனது கணவன்செய்த அபராதத்தை யுட்கொண்டு வெளியாகக்காட்டுகின்ற கோபக்குறிப்பே மானமெனப்படும், அம்மானம் யோசிக்குமிடத்துக் (குற்றமற்ற) குருமானமென்றும் (பொருந்திய) மத்தியமானமென்றும் இலகுமானமென்றும் உண்டாகிய கூறுபாட்டால் மூன்றாகவழங்கும்; அவற்றின்றன்மைகளை யினிமேலறிவிப்போம் எ-று.

திரிவிதமானங்களும்
உண்டாவதற்குக்காரணம்.

வேற்றுவனிதையைக்கொழுநன்மேவுகுறி நாயகிதன்விழிக்கு
நேராய்த், தோற்றுதலுமவனவள்பேர்சொல்லுதலுமன்னவனத்தோ

கைதன்னை, யேற்றுமனமகிழ்வொடுயார்த்திட்டலுங்காரணமாகவெழுங் கேகிற்குஞ், சாற்றுகுருமானமுதன் மூன்றுமுறைவகையினென்பா சான்றோர்தாமே.

(இ - ள்.) தனதுநாயகனை வேறொருத்தியைக் கூடியதாலுண்டாகிய அடையாளம் நாயகியினுடைய கண்களுக்குப் புலப்பட்ட தோற்றுதலாலே குருமானமும் வேறொருத்திபெயரை அந்நாயகனை சொல்லுதலாலே மத்தியமானமும், வேறொருத்தியை யவனெதிர்ந்து மனக்களிப்போடு பார்க்குதலாலே இலகுமானமும்பிறந்து பொருந்துமென்றுயாநதோர சொல்வா எ-று. (௮௪)

குருமானநாயகிக்கிலக்கியம்

கலிக்கூற்று.

எதிர்சக்களத்திபதவிரற்கொம்பரக்கின்சுவடு
பதிநெற்றிதோன்றசசுகவனர்வெற்பிறபதிவரக்கண்
டதிகச்சினங்கொண்டனள்செங்கட்பார்வையினாற்செவிசூழ்
கதிர்முத்தெலாம்புதுமாணிக்கமானவக்காரிகைக்கே

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரி லொருநாயகி தனக்கெதிரே சக்களத்தியினுடைய கால்விரலில அணிந்திருந்த கொம்பரக்கின குறிபதிந்த நெற்றிப்ரகாசிக்கத் தனதுநாயகன் வரக்கண்டு அதிககோபங்கொண்டனள் அப்போது சிவந்தபார்வைகளாலே காதுகளிற்சூழ்ந்த கிரணங்களையுடைய முத்துக்களெல்லாம் அந்தநாயகிக்குப புதியமாணிக்கங்களாயின எ-று. (௮௫)

மத்தியமானநாயகிக்கிலக்கியம்

கலிக்கூற்று.

தழுவுறுமன்பன்மறுமாதினுமந்தனைச்சொலவப்
பொழுதினவன்பிருபபொன்னுபாணப்புயவரைகள்
விழுமியசெஞ்சலசம்பூத்திலங்கமிகழுனிந்தாண்
மழுவணியுங்கைசசுகவனர்நாட்டிளமாமயிலே.

(இ - ள்.) ஆலிங்கனஞ்செய்கின்ற தனது நாயகன் வேறொருத்தி பெயரைச்சொல்ல, அந்தசசமயத்தி லவனுடைய அழகிய சொன்னாபரணந்தரித்த தோள்களாகிய மலைகளிரண்டுஞ் சிறந்த செந்தாமரைமலர் புட்பிக்கப்பெற்று ப்ரகாசிக்கும்படி மழுவேந்திய கையையுடைய சுகவனநாதரது நாட்டின்கண்ணே யிளமையும் பெருமையும்பொருந்திய வொருநாயகியானவள் மிகவுங்கோபித்தாள் எ-று. (௮௬)

இலகுமானநாயகிக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

உவகையிற்காதலியோடுறைகோன்மற்றொருத்திதனைப்
பவமொழித்தாளுஞ்சுகவனர்வெற்பிடைப்பார்த்துடனிங்
கிவளிதைக்காணினென்னுமோவென்றெண்ணியெதிர்திரும்ப
வவனுதற்றீட்டியமான்மதஞ்சிந்துரமாகியதே.

(இ - ள்.) பிறவித்துன்பத்தைத் தீர்த்து அன்பர்களை யாண்டருளுஞ் சுகவனநாதர் மலைச்சாரலிற் களிப்பாகத் தனது நாயகியோடிருக்கும் ஒருநாயகன் வேறொருத்தியை யெதிர்ப்பட்டுப்பார்த்துப் பின்னுடனே நாம்பார்க்கின்ற விக்குறிப்பை நமது நாயகியாகிய இவள் கண்டால் என்னவிளையுமோவென்று நினைத்துத் தன்னுடைய கிக்கெதிரே திரும்பியமாத்திரத்தில் அவனுடைய நெற்றியில் இட்டிருந்த கத்தூரித்திலகஞ் சிந்தூரத்திலகமாயிற்று எ-று. (௮௭).

திரிவிதமான நிவர்த்தியின

இலக்கணம்.

மிகவருந்திநிவர்த்திசெயத்தகுந்துளது குருமானம்வேண்டியேசற்
றகமுழந்துபரிகரிக்கலாவதுமத்தியமானமவைபோலின்றி
யிகழ்விலன்பனெளிதாகத்தணித்திடப்பட்டதுதான்மற்றிலகுமானம்
பகரினெந்தவகையினுந்தீர்ப்பருமானங்கடினரசாபாசமாமே.

(இ - ள்.) மேற்கூறிய குருமானம் நாயகனானவன் மிகவும்வருந்தி நிவர்த்திக்கத்தக்கது; மத்தியமானம் அந்நாயகன் வேண்டிநின்று சிறிது மனம் வருந்தி நிவர்த்திக்கத்தக்கது; இலகுமானம் அவ்விரண்டு தன்மையுமில்லாமல் (இகழ்ச்சியற்ற) நாயகன் எளிதிலே நிவர்த்திக்கத்தக்கது; சொல்லுமிடத்து எந்தவகையாலும் நிவர்த்திக்கக்கூடாதிருக்குமானம் (கொடிதான) ரசாபாசமாம் எ-று. (௮௮)

குருமானநிவர்த்திக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

தத்தியதத்தைநின்போற்பேசக்கேட்டதைத்தான்பிடித்தேன்
கொத்தியதிப்படிவேற்றோர்நகத்தின்குறியிதெனப்
புத்திகொளேலென்றனிச்சத்திற்கோன்கஞ்சப்பூப்புனைய
வொத்தினிதாகக்கலந்தாள்சுகவனரூர்வஞ்சியே.

(இ - ள்.) சுகவனநாதர் நகரிலோர்நாயகி யூடியிருக்கத் தனதுநாயகன் அவளைநோக்கித் தாவிவிளையாடுகின்றகிளி உன்னைப்போலங்கே சிலவார்த்தைகளைச் சொல்லியதால் அதிசயித்து அதைநான் கையாற்பிடித்தேன், அப்போது அது

மேனியி லிப்படிக்கொத்திபது, நீயிதை வேறேபெண்களின நகக்குறியென்ற புத்தியிலெண்ணாதேயென, உபசரித் தவளது பாகமெனனும் அனிச்சப்பூவிற்ற னது கைகளாகிய தாமரைப்பூவையணியச் சமாதானமா யினிமையோடு சேர் ந்தனள் எ-று. (அக)

மத்தியமான நிவாததிக் கிலக்கியம்.
கலிக்கூற்று.

மோகனமாலைகிடைத்தத்துனக்கென்றுன் முழுது
நீகருதாதவள்பேறொனசரிற்றதனீநியன்றென்
முகமதினைப்பணிகோன்கொடுவெந்தணிந்திடலுங்
தேகமகிழச்சுகவனரோர்வஞ்சிசேர்ந்தனளே.

(இ - ள்.) சுகவனநாதாலயத்தில ஓர்நாயகிபூ— நாயகனவளைநோக்கி மோகனமாலையென்னும் ஓராபரண முனக்குச்சரிக்க இப்போது கிடைத்திரு க்கின்றதென்று நான சொல்லிமுடிக்குமுன்னமே அவ்வார்த்தைமுழுதையும் யோசியாமல வேறொருத்தியினுடைய பேரென்றெண்ணி நீகோபிப்பது நீதி யல்லவென்று அவளுடையமார்பிலத்தவாபரணத்தைத்தொடுவித்து அணிவி த்தமாத்திரமே சரீரம் புளகிக்கும்படி அந்நாயகனை அந்நாயகிகூடினள் எ-று. ()

இலகுமான நிவாதத்திக் கிலக்கியம்.
கலிக்கூற்று.

பிரிவெளிதோவெப்படித்தனித்தாளிருந்தப்பேதையெனும்
பரிவதனென்மேலப்பார்த்தேனலதொருபாவமுமின்
றரியவமுதிகழ்ந்தார்நஞ்சுண்பார்முனிவாற்றுகென்
குரிசிறழுவச்சுகவனரோர்வஞ்சிகூடினளே.

(இ - ள்.) நாயகி யூடலகண்டநாயகன அவளைநோக்கி ஓ பெண்ணே அர் த்தக்கன்னிகை தனித்து நின்றதைப்பற்றி பிரிவெனபதெனன எளிதா, நம்மை யொவ்வொரு சமயங்களில வாட்டியிருக்கின்றதே யிவளெப்படித் தனித்தா ளோவென்ற இரக்கத்தினாலே யையப்பார்த்தேன், அல்லது வேறேயொருபா வமுமில்லை, அருமையான அமிர்தத்தை யிகழ்ந்துதள்ளி விடத்தையுண்பவா யார், நீயிக்கோபத்தை யாற்றுவாயென்று தழுவியவுடனே சுகவனநாதர் தல த்திலிருக்கும் அந்தநாயகி அந்நாயகனைக் கொஞ்சிச்சேர்ந்தனள் எ-று. (கக)

இராசாபாசத்துக்கிலக்கியம்.
தலைவன்பாங்கனொடுசொல்லியது.

பணிந்தேனுபசரித்தேன்றொழுதேன்பொற்பணிகொடுபோ
யணிந்தேனடிக்கடியாணையிட்டேனவ்வரிவைசினந்
தணிந்தாளிலைமனங்கல்லோவென்னுசைதகாதெனத்
துணிந்தாள்சுகவனர்வெற்பினண்பாவென்னசொல்லுவதே.

(இ - ள்) சுகவனநாதர் மலைச்சாரலில் வசிக்கும் பாங்கனே! அந்தநாயகியுடைச் சமாதானஞ்செய்யவேண்டுமென்று நான் காலில்வீழ்ந்து வணங்கினேன், உபசாரமாகத் துதித்தேன், கைகளால் குடபிட்டேன், பொன்னாற்செய்த வாபரணங்களைக் கொண்டுபோய்த் தரித்தேன், அடிக்கடி பலவிதமாக ஆணையிட்டேன், இவைகளுக்கெல்லாம் அவளிரங்கிக் கோபந்தணிந்தாளில்லை, அவளோ தமனையகலமோவென்று சிநேகந்தனக்குச் சத்துருசத்தனன்றென்று துணிந்தனள், இதற்கு நாமென்னசொல்லுவது எ-று. (௯௨)

ஏகசையானனியோன்னியவியோகசையோகத்
துறசமப்பிரமாதிக்கியத்திற்கு இலக்
கணங்கள்.

ஒருபூவினணையிலொருவரையொருவரிரிதலுள்மூவந்துசேர்தல
கருத்தேகசயனானியோன்னியவியோகசையோகந்தானுகு
மிருதேகமோருயிரெனவிடும்படிநாயகிபுருடனொன்போர்த்தமபால
வருநேயமிகுதிபிரமாதிக்கமெனுமபழயவடநூனமாதோ.

(இ - ள்.) ஒன்றாகிய படுக்கையனத்தில் ஒருவரையொருவர் பிரிதலும் பின்மனமகிழ்ந்து சேர்தலுமாகிய இதுவே குறிக்கப்பட்ட ஏகசையானனி யோன்னிய்வியோகசையோகமாகும். நாயகிபுருடனென்பவரிடத்திலே தேகந்தானிரண்டுயிரொன்றேயென்று மதிக்கும்படி தோன்றுகின்ற பிரியமிகுதிய பிரமாதிக்கமென்று புராதனமாகிய வடகலைகள் சொல்லும் எ-று. ()

ஏகசையானனியோன்னிய
வியோகசையோகத்துக்கிலக்கியம்.

கலித்துறை.

துணைவனதாசைவெப்பிணைநகணைடுசனற்பயிரா
தணையினைநாயகிபோகாட்டினளந்தருளிலனென
றிணையவனும்புறந்தந்தானசுகவனரின்பவெற்பிற்
கணமகன்றுயிரூடவாரேர்நற்கலந்தனரே.

(இ - ள்.) ஒருபடுக்கையின்மேல் நாயகனும் நாயகியும் பொருந்தியபோது அந்தரப்பிரியனாகி அகரதந்தன்பொன் செந்நிறத்தைக்கண்டு வெற்றிலைச்சுருளை யவனுக்குப்பகிர்ந்து கொடாமல் ஊடி நாயகியானவள் முதுகுகாட்டிப் படுத்தனள், இணங்குகின்ற அந்நாயகன் அதையறிந்து நமக்கிவள் வெற்றிலைகொடுக்கவில்லையேயென்று தானும் புறங்கொடுத்தான், சுகவனநாதரின் பெருந்தமலைச்சாரற் பட்டணங்களையுடைய மன்மதன்து முயற்சியாற் பின்புநித்திரையூடேயவ்விருவரும் புரண்டு திரும்பி நேராயச்சேர்ந்தார்கள் எ-று. ()

பிரேமாதிக்கியததுக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

தொனித்தமறைகளுமெட்டாதசுகவனர்சோலைவெற்பிற்
றனித்தனிநாம்பிரிந்தான்மயலாமொன்றிற்சன்னதமு
மினித்தவுரையுங்கிரீடையுமிலலவென்றேபதியுங
கனித்துவர்வாய்மயிலுந்தேர்வர்செய்யக்கடவதென்னே.

(இ - ள்.) சத்தித்தவேதங்களுக்கு மெட்டாத உயர்ந்த சுகவனநாதரது மலைச்சாரிலொரு நாயகனுங் கொவ்வைப்பழம்போற சிவந்தவாயினையுடைய ஒருநாயகியும் தங்களிலே யொருவரையொருவர் பார்த்து நாமிருவரும வேறுவேறாகப்பிரிவோமானால விரகமுண்டாகின்றது; ஒன்றுபட்டகலந்தாலோ காமசன்னதமும மதுரவசனங்களுங கிரீடைகளும் இல்லனவாயிருக்கின்றன வென்று யோசிப்பார்கள். ஆயின அவர்கள் செய்யககடவதுயாது எ-று. (௩௫)

இத்தனைமலர்களா லிக்குச்சம
முடிவுபெற்றதெனல.

கறைதவிர்ந்தபொதுவியல்பாற் கனதனநாயகிகளிலக்கணமுமற்று, முறையமைந்தமலரிதொன்றுமுனமலர்ந்தவிரண்டுமெனுமூன்று பூவாற், துறைசிறந்தமுதற்குச்சந்துலங்கவலங்கரித்தனமத்தொன்றுலொப்ப, மறைவிலின்பமலியிரண்டாவது குச்சந்தனையினிநாம்வகுப்பாமன்றே.

(இ - ள்.) குறறநீங்கிய பொதுககுணங்களாலே வழங்கியகனத்த முலைகளையுடைய பலநாயகிகளின இலக்கணமும ஏனையவிலககணமும் கிரமமாக வமைந்திருந்த விபகுதியாகிய ஒருமலரும் முனனமே யிருபகுதிகளாக விரிந்த இரணடு மலர்களும் எனகின்றமூனறு மலாகளாலே சிறநதவழியினையுடைய இநதமுதலாவது குச்சமாகிய பூஙகொத்து பிரகாசிககும்படி அலஙகரித்தோம; அநதபூர்வ கிரநதம்போலவே யினியொழிவறற வினைபததால மிகுந்த இரண்டாவது குச்சததைத வகைபபடுததுவோம் எ-று. (௩௬)

முதலாவதுகுச்சம் முற்றும்.

ஆ செய்யுள் ௧௦௭.

௩-வது மலர்

முறறும்.

உ

சிவமயம்.

## இரண்டாவதுகுச்சம்.

# அஷ்டவிதநாயகிகளின்பெயர்.

தினமகிழ்கூர்சுவாதீனபதிகையொடுவாசகசச்சிகையேயன்றிக்
கனவிரகோற்கண்டிதைவிப்பிரலத்தைகண்டிதைபொற்கலசநாணுந்
தனகலகாந்தரிதைபுரோஷிதபதிகைமலர்ந் தொசிந்ததளிரப்பூங்கொம்
ரனவபிசாரிகையிவாமற்றட்டவிதநாயகிகளாவர்மாதோ. [ப

(இ - ள்.) (எப்போதும் மகிழ்ச்சியிருந்த) சுவாதீனபதிகையென்றும், வாசகசச்சிகையென்றும், (கனந்தங்கிய) விரகோற்கண்டிதையென்றும், விப்பிரலத்தையென்றும், கண்டிதையென்றும், (சொர்ணகலசமும் வெட்கப்படத்தகுந்த முலைகளையுடைய) கலகாந்தரிதையென்றும், புரோஷித பதிகையென்றும், (மலரைத்தசையாநின்ற தளிர்வாய்ந்த பூங்கொம்பையொத்த) அபிசாரிகையென்றும் சொல்லப்பட்ட இவர்களே அட்டநாயகிகளாவார்கள் எ-று.

இப்பெயர்களை வடநூலார், ஸ்வாதீனபதிகா, வாசகசஜ்ஜிகா, விரஹோத்கண்டிதா, விப்ரலப்ததா, கண்டிதா, கலஹாந்தரிதா, ப்ரோஷிதபதிகா, அபிசாரிகா எனவழங்குவர். (க)

சுவாதீனபதிகாநாயகியினிலக்கணமும்

அவள்குணங்களும்.

பகலிரவுந்தனதுமனதறிந்துசொன்னபடிநடக்கும் பதிவாய்ந்து
ள்ளாள், சுகமருவுஞ்சுவாதீனபதிகையென்பரவட்கு மலர்த்தோட்ட
ஞ்சுற்றல், புகழ்மதனன்களிக்கவிழாப்புரிதன்மதமகங்காரம்பூணல்பி
னனு, மிகநினையுங்காரியமவ்விதமுடித்தல்குணங்களெனவிளங்குமன்
றே.

(இ - ள்.) (இன்பம்பொருந்திய) சுவாதீன பதிகையென்பவள் பகலினும் இராவினும் தனது மனக்குறிப்பை யறிந்தவனுகித் தன்சொற்படியே நடக்கின்ற நாயகனையுடைய நாயகியாமென்றுசொல்வர் மூன்னோர்; பூந்தோட்டங்களிலேதிரிதலும், கீர்த்திவாய்ந்த மன்மதன்மகிழும்படி அவனது திருவிழாநடத்தலும், மதம், அகங்காரம், இவற்றைக்கொள்ளுதலும், மிகவுந் தானினைக்குங்காரியங்களை அப்படியே முடித்தலும், அந்நாயகிக்குரிய குணங்களாகப்பிரகாசிக்கும் எ-று. (உ)

முக்தாசுவாதீனபதிகைக்கிலக்கியம்.
தலைவிசகியொடுசொல்லியது.

முலையிற்பருமையுமூரலிற்காந்தியும்மோகவிழி
வலையிற்குடிலமுமாடலிற்பாடலிலவல்லமையு
மிலையெற்கெனினுமிமையாமற்பார்ப்பனெனைக்கொழுநன்
மிலைசொற்சுகவனாவெற்பணங்கேயென்னவிந்தையிதே.

(இ - ள்.) புகழைத்தரித்த சுகவனநாதர் மலைச்சாரலிலவசிக்குஞ் சகியே முலைகளிற பருத்ததன்மையும், சிரிப்பிற காந்தியும், ஆசையைத்தருகின்ற கண்களாகியவலையில் வஞ்சனையும, ஆடுதலிலும் பாடுதலிலும் வலலமையும, எனக்கில்லாமலிருந்தாலும என்து நாயகன என்னையிமைடாமறபாரத்துக்கொண்டிருப்பான இது என்ன அதிசயஞ்சொல் எ-று. (௫)

மத்தியாசுவாதீனபதிகைக்கிலக்கியம்.
தலைவிசகியொடுசொல்லியது.

தடமார்பு முலைதொடுதற்குமபலசரசத்தினுக்கு
மிடமேகொடாதுடைநானிறுக்கிக்கொண்டிடர்செயினுந்
திடநாயகனன்பொடுவேண்டுவனெனைசகீயெங்கு
நடவானிதென்னவியப்போசுகவனர்நாட்டணங்கே.

(இ - ள்.) சுகவனநாதர் நாட்டிலிருக்கின்ற சகியே! விசாலித்துப்பெருமைதங்கிய என்து முலைகளைத்தனது கைகளாற தொடுவதற்கும், பலவித சரசங்கள் செய்வதற்கும் நான் சற்று மிடங்கொடாமல் சேலையையிறுக்கிச் சுருட்டிக்கொண்டு வருத்தத்தையுண்டாக்கினாலும், உண்மையையுடைய நாயகன் பிரியத்தோடு என்னை யாசித்து வேண்டுவன், என்மேற் கோபங்கொண்டு எப்புறத்திலுஞ் செல்லான், இதுவென்ன ஆச்சரியமோ எ-று. (௬)

பிரபுடாசுவாதீனபதிகைக் கிலக்கியம்.
தலைவிக்குச் சகிசொல்லியது.

முகநகைவாய்கண்மொழிமுலைமற்றுமுறையினொத்து
மிகவளர்மோகக்கனியாநினையன்றிவேறுளவெம
மகளிராயுங்களனாடுமெண்ணுதுன்வழியொழுகித்
திகழ்பதியோடென்னபேதுறுசுகவனர்சேலமின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் சேலமாநகரிலவசிக்கின்ற நாயகியே! முகமும, சிரிப்பும், வாயும், கண்களுஞ், சொற்களுந, தனங்களும், இவைபோல் வனபிறவும் துன்முறைப்படி யொத்திருக்கப்பெறறு, மிகவும் வளர்கின்ற ஆசைக்கனி

யாகிய வுன்னை யல்லது வேறுள்ள எவ்வகை மேன்பாடுடைய பெண்களையுஞ் சொப்பனத்திலும் மதியாதவனாகி, உனது குறிப்பின் வழியே நடந்து விளங்குகின்ற நாயகனிடத்துனக் கென்னபேதம் அதைவிடுவாய் எ-று. (ரு)

பரகீயாசுவாதீனபதிகைக் கிலக்கியம்.

தலைவிசகியொடு சொல்லியது.

முனைவேல்விழிமடவாரபலர்தன்மனைமொய்த்துலவப்
புனைமேடைதிண்ணைபுறமுன்றிலாயமபொழில்புகினு
மெனையேயவ்வல்லபன்பார்க்கின்றனனி துவென்னவிந்தை
யினைநீர்முனிவர்பரவுஞ்சுகவனர்வெற்பணங்கே.

(இ - ள்) பாசங்களினின்று நீங்கிய முனிவோர்கள் துதிக்கின்ற சுகவனநாதர் மலைச்சாரபிற் சஞ்சரிக்குமெனது சகியே! கூரியவேலைப்போன்ற கண்களையுடைய இளமைப்பருவப் பெண்கள் அநேகர் தனதுவீட்டில் மொய்த்துலாவிக்கொண்டிருக்க, அவர்களை மதியாதவனாகி நான் அலங்கரிக்கப்பட்ட உபரிகைமேடை திண்ணை புறவாசல் முன்வாசல் பாங்கியர்கூட்டஞ் சோலை இவைகளிலெங்கே பிரவேசித்தாலும் என்னையே அந்தநாயகன் பார்த்துக்கொண்டிருக்கிறன் இதுவென்ன அற்புதம் எ-று. (சா)

சாமானியாசுவாதீனபதிகைக் கிலக்கியம்.

தலைவிசகியொடு சொல்லியது.

வேனேர்விழிமடவார்மனைதோறுமிருந்திருக்கத்
தானேகொக்கோககுருவென்றெனையத்தலைவனெண்ணி
வானேயெனப்பொன்மணிபெய்துதொண்டுசெய்வானிதென்ன
நானேமெச்சிக்கொள்ளலாமோசுகவனர்நாட்டணங்கே.

(இ - ள.) சுகவனநாதர் நாட்டிற சகியே! வேலபோன்றகண்களையுடைய வேசையர் வீதிகளதோறும் பிரபலித்திருக்க அவர்களையெல்லாம்விட்டு வலிதிலென்னைக் கொக்கோகசாஸ்திரதீக்ஷாகுருவென்றுநினைத் தந்த நாயகன் மேகமே சமானமென்று சொல்லும்படி சொர்ணங்களையும் ரத்தினங்களையுங் கொண்டுவந்தெனக்கெதிரேசொரிந்து அடிமைத்தொழிலுஞ் செய்வான், இதுவென்னவிந்தை, நானே யென்னை மெச்சிக்கொள்ளலாகாது எ-று. (எ)

க - வது மலர் முற்றும்.

வாசகசச்சிகாநாயகியி னிலக்கணமும்
அவள்குணங்களும்.

ஆகமுற்றவணிந்துபதியனு மிப்போதெனக்கலவிககானவெல்லாம்
சேகரித்துவைத்தெதிர்பார்த்திருப்பவளேவாசகசசிகையாமென்பர்
மேகமொத்தகுழற்சகிமார்தமைப்பரிகாசித்தலபலவிதகோரிகைகை
தாகமுற்றுத்தூதிகளைத்தான்வினவன்முதலவவடன்பண்பாமே.

(இ - ள்.) வாசகசச்சிகையென்பவள தனது சரீரமுழுதும் அலங்கரித்து க்கொண்டு இப்போது நாயகன வருவானெனறு கலவிககுவேண்டிய பதாா ததங்களையெலலாம் சேகாஞ்செய்துவைதது எதிாபாாக்கும் நாயகியேயாமெ னறு சொலலருயாநதோா. மேகததையொத்த கூநதலையுடைய சகிமாாகளை பரிகாசிததலும், பலவிதகோரிகைககளைக் கொள்ளுதலும, விருபபததோடு தா திகளை வினவுதலும், முதலானவை அந்நாயகியினது குணஙகளாகும் எ-று. ()

முததாவாசகசச்சிகைக் கிலகஙியம.
கலிக்கூறறு.

சுருள்செயல்புட்பங்தொடுத்தல்வயங்கசசுடாதிருத்தல்
பொருள்பிறதேடலிவற்றிற்சகிகள்புடைவிளையக்
குருநகைசற்றரும்பத்துகிலசோரவுட்கூசவன்பன்
வருவழிபார்க்குமொருமான்சுகவனர்மண்டலத்தே.

(இ - ள்.) சுகவனநாதாநாட்டின்கண ஒரு நாயகியானவள தனது சகி மாாகள் தாம்பூலமடிததல் புட்பஹாரநதொடுததல் பரகாசிக்குமபடி தீபங களைத்திருத்தல் மறறுங் கலவிககு வேணடியவைகளெலலாவறறையுஞ் சேகரி த்தல் முதலாகிய இவ்விதமுயறசிகளை யருகிலவிளைாந்துநடாதத் தான அழகிய புன்சிரிபபுத்தோனறவும இடையிற்கட்டிய சேலைநழுவவும் உள்ளேவெட்கமு ண்டாகவுமிருந்துகொண்டு நாயகன வருமவழியை யெதிாபாாப்பள் எ-று. ()

மததியாவாசகசச்சிகைக்கிலக்கியம்
கலிககூறறு.

மதாழிலைச்சகிகட்குக்காட்டலிற்புட்பங்தொடுக்குமயி
லெழிலிற்பிறளைவெலவேண்டல்போற்பணியேநதுமன்றிப்
பழியற்றவோவியம்பார்தெதனமெத்தப்பதிவருமவ்
வழியுற்றுநோக்குஞ்சுகவனர்வெற்பின்மதனகவே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாாபின மயில்போலு மொருநாயகியா னவள் தனது தொழில் வல்லமைகளைச் சகிகளுக்குக்காட்டுவதுபோலப் புட் பஹாரங்களைத் தொடுப்பள், தன்னழகினாலே அயலிலுள்ளபெண்களையெல்லா

ம வெல்லவேண்டுமென்று நினைப்பதுபோலப் பலவாபரணங்களையுந்தரிப்பள், அன்றியுங் குற்றமற்ற சித்திரங்களைப் பார்ப்பதுபோல மிகவும் நாயகனைவரும் வழியை உற்றுப்பார்ப்பள், இவைகளையெல்லாம் மன்மதன்கண்டு சிரிக்கும் படிக்கு எ-று. (சo)

பிரபுடாவாசகசச்சிகைக்கிலக்கியம்
கவிக்கூற்று.

நறைகுழலூட்டிநகைதுகிலப்பூட்டிநறுங்களப
நிறைமலர்கஞ்சனமெல்லாமமைத்துநிமிர்படுக்கை
யறைகமழ்சண்பகத்தாலவேய்ந்தெனத்தன்னணிநகவுற
நிறைவரல்பார்க்குஞ்சுகவனர்வெற்பினிளங் குயிலே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரலில இளமைதங்கிய குயில்போலும் ஒருநாயகியானவள் தனதுகூந்தலுக்கு கந்தப்புகையூட்டி ஆபரணங்களையுந் துகிலையுஞ் சிங்காரமாகத்தரித்து வாசனைபொருந்திய சந்தனகளபங்கள் நிறைந்த புட்பங்கள் கண்ணாடி முதலியவைகளெல்லாவற்றையும் பக்கசையிற் சேகரித்துவைத்துக்கொண்டு அப்படுக்கைவீடுமுழுதுங் கமழாநின்ற சண்பகமலர்களால் அலங்கரித்தாற்போலத் தனதுவடிவழகு பிரகாசிக்கும்படியிருந்து நாயகனவரவை யெதிர்பார்ப்பள் எ-று. (கக)

பரகியாவாசகசச்சிகைக்கிலக்கியம்
கவிக்கூற்று.

அத்தையைத்தூங்கவைத்துத்தீபத்தைக்கடிதாங்கவித்தோர்
தத்தைமுன்மேடைப்புறுவொலிகாட்டித்தனிப்புரண்டு
மெத்தையிலோலையசைந்திடச்சுற்றிமிகத்தடவி
யெத்தயற்சோரனைப்பார்க்குஞ்சுகவனரின்புரத்தே.

(இ - ள்.) சுகவனநாதரின் இனிமைதங்கியதலத்தின்கண் ஒருகிளிபோலு நாயகியானவள் தனது மாமியாரைத் தூங்கும்படிசெய்து விளக்கைச் சீக்கிரத்திலவித்து அங்கே முன்னுக்கிருக்கின்ற மேடையிலுள்ள புறாவைப்போற கூவிக்கொண்டு மெத்தையின்மேலே தனித்துப்புரண்டு காதோலைகளசையும்படி சுற்றுப்புறத்தையெல்லாங் கைகளாலேதடவித் தந்திரமாக அன்னியனாகிய கள்ளப்புருடனைத் தேடிப்பார்ப்பள் எ-று. (சஉ)

சாமானியாவாசகசச்சிகைக் கிலக்கியம்
கவிக்கூற்று.

கச்சுநெகிழ்க்கக்கைகாப்பும்பிற்கொங்கைகளைப்பிடிக்க
மெச்சுகடுக்கனுஞ்செவ்விதழ்த்தேனுண்ணமேற்சரமு
முச்சுதலெண்ணிமணமபூசியன்பருளமயங்க
நச்சுறுகண்ணியிருந்தாளசுகவனர்நாட்டிடத்தே.

(இ-ள்.) சுகவணநாதா நாட்டின்கண் விடம்போன்ற கண்களையுடைய வொருநாயகியானவள் நாயகனறனது இரவிக்கையை யவிழ்க்கவேண்டுமாயின் அவனது கைச்சரப்பையும், பின்பு தனங்களைப்பிடிக்கவேண்டுமாயின மெச்சத்தகுந்த அவன வச்சிரக்கடுக்கனையுஞ், சிவந்த அதரபானஞ்செயயவேண்டுமாயின் அவன்மேலே தரித்திருக்குஞ் சரபபணியையம், எதற்ப்பறிக்க நினைத்துக் களபங்களைப்பூசிக்கொண்டு புருடர்களெல்லாம் மனமயங்கும்படி யிருந்தனள் எ-று. (௧௫)

௨-வது மலர் முற்றும்.

விரகோற்கண்டிதாநாயகியி னிலக்கணமும

அவள் குணங்களும்.

குறியிடமுற்றிதுவரையிற கொழுநனிங்கே யடுத்திலனேகூடற்
கென்று, செயிவிரகத்தோடுசிந்திப்பவள்விரகோற்கண்டிதையாந்தேக
மைந்த, லயிவறுகொட்டாவிவிடலழல் வருந்தனடுங்கல்விளையாட்டுரு
மை, வயியளெனப்பாங்கிகள்பால மனத்துயர்கூறுதன்முதலம்மயில்
பண்பாமே.

(இ-ள்.) விரகோற்கண்டிதையென்பவள் தாங்கள் குறித்தவிடத்திலிருந்துகொண்டு இதுவரை நாயகன் கூடுதற்கு வரவில்லையேயென்று நிறைந்த விரகத்தாற் சிந்திக்கும் நாயகியேயாம், மேனியிளைத்தல், புத்திமறந்து கொட்டாவிவிடுதல், அழுதல், வருந்துதல், ஏழைபோல் பாங்கிகளிடத்தே தனது மனவிசனத்தைச்சொல்லுதல இவை முதலானவை யந்நாயகியின் குணங்களாகும் எ-று. (௧௬)

முத்தாவிரகோற்கண்டிதைக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

பதியுற்றிலனெவட்கூடினன்கொல்லெனப்பன்னுமின்னு
ரெதிர்சொற்சொலாதுறும்நாண்மிக்குயிர்க்குமிலுப்பைமல
ரதின்மெய்க்கவுள்வெளுக்கப்புறம்பார்த்திலளாய்விழிநீர்
முதிரத்தளருஞ்சுகவனர்வெற்பினெர்மொய்குழலே.

(இ-ள்.) சுகவனநாதா மலைச்சாரலில் நெருங்கிய கூந்தலையுடைய வொருநாயகியானவள் இன்னமு நமது நாயகன் வராதிருக்கின்றான எவளைக்கூடினானோவென்று ஆலோசிப்பள், வெட்கமிகுந்து பாங்கிகளோடு வார்த்தையொன்றுஞ் சொல்லாதிருப்பள், பெருமூச்சுவிடுவள், சரீரத்திற் கபோலங்களிரண்டும் இலுப்பைப்பூப்போல் வெளுக்கப் பக்கமெங்குந் திரும்பிப்பாராதவளாய்க் கண்களிலே நீர்நிறையவருந்துவள் எ-று. (௧௭)

மத்தியாவிரகோற்கண்டிதைக் கிலக்கியம்.

கலிக்கூற்று.

அழைத்திலளோமின்னழைந்துமிருட்கஞ்சியண்ணிலனோ
பிழைத்தெவள்பாற்சிக்கினானோமன்னென்றுபிதற்றியிரு
குழைப்பொலிபூந்துகள்வீழந்தேனக்கண்புனலகூர்தரச்செய்.
துழைப்பதுமக்கைச்சுகவனர்வெற்புற்றதோர்குயிலே.

(இ - ள்.) மானேந்திய தாமரைமலர்போலுங் கையினையுடைய சுகவன நாதர் மலைச்சாரில் ஒருகுயிலபோலு நாயகியானவள் நாமனுப்பிய தூதி நாயகனை யழையாதிருந்துவிட்டாளோ, அல்லது அவள் அழைத்தும் அந்நாயகன் இந்த இருட்டுக்குப்பயந்து தான வராதிருந்தானோ, வொருவேளைதவறி யெவளிடத்திற சிக்கிக்கொண்டானோவென்று பலவாறுகப்புலம்பித் தனது காதற பிரகாசிக்கும்படி தரித்த புட்பத்தினறுகள்வீழ்ந்த பாவனையாகக் கண்களிமேல நீர பெருகச்செய்துகொண்டிருந்தனள எ-று. (கசு)

பிரபுடாவிரகோற்கண்டிதைக்கிலக்கியம்.

தலைவிசொல்லியது.

காயேபிராத்திரிநீயேயெற்கன்னைகடினவிரு
ளீயேபிதாமரங்காணீங்களேகிளைநீடிசைகூ
ரீயேயிமிர்புதர்நீயேசகியன்பனெய்திலனென்
வாயேமலர்ந்துசுகவனர்நாட்டென்புண்மாற்றுமினே.

(இ - ள்.) இராத்திரியே யெனக்கோபியாதே, நீயே யெனக்குத்தாய், கடினவிருளே நீயேயெனக்குப்பிதா, விருக்ஷங்களே நீங்களே யெனக்குச்சுற்றங்கள், நெடியகீத மிருந்தவண்டுகள் சுதகிக்கப்பெற்ற புதர்வீடே நீயே யெனக்குச் சகி, யெனது நாயகனின்னம் வராதிருக்கின்றான் அதென்னகாரணம் உண்மையாக நீங்களெல்லோரும் வாய்திறந்தெனக் கினனபடியென்று தெரிவித்துச் சுகவனநாதர் நாட்டில்வருந்தும் எனது மனவிசனத்தைத் தீர்ப்பிர்கள் எ-று. (கஎ)

பரகீயாவிரகோற்கண்டிதைக்கிலக்கியம்

தலைவிசொல்லியது.

வனம்புகுந்தும்புயனீர்த்துளிமூழ்கியும்மாமலரா
லனங்கனைப்பூசித்தும்வெட்கத்தைத்தானமதாகவிட்டுந்
தனந்தனியுற்றும்விழிப்பாம்விரதந்தனைத்தொடுத்தே
னினங்குறியன்பன்சுகவனர்வெற்பினிங்கெய்திலனே.

(இ - ள்.) ஆரணியத்திறபுகுந்தும் மேகங்கள் பொழிகின்ற நீர்த்துளிகளிலேமூழ்கியும் பெருமை தங்கிய புட்பங்களால அடிக்கடி மனமதனைப்பூசை செய்தும் எனது வெட்கத்தைத் தானமிட்டும் தன்னந்தனியாகவிருந்துங் கண்விழிப்பாகியதவசை நானசெய்தேன இன்னமும் யானகுறித்தநாயகன சுகவனநாதரது மலைச்சார்பாகிய இவ்விடத்திறகு வராதிருக்கின்றானே எ-று. ()

சாமானியாவிரகோற்கண்டிதைக்கிலக்கியம

கவிக்கூறறு.

அந்தப்பிரியனிதுவ்வாயேனிங்கடைந்திலன்மற்
றெந்தச்சிறிக்கிபகட்டினளோபொன்னெலாமவட்குச
சிந்தத்துணியினென்செய்வேனென்றுள்ளந்திகைத்துருகுதாள்
கந்தச்சுகவனர்வெறபோர்பெண்மையலிறகட்புனலே.

(இ - ள்.) வாசனைபொருந்திய சுகவனநாதா மலைச்சார்பில ஒருநாயகியானவள் அந்தநாயகன இனிதுவரையிங்கே வாராதிருக்கின்றான, அவனை யிந்தத்தெருவில் எந்தச்சிறுக்கி யெத்திவசமாக்கினாளோ, கையிலுள்ள பணங்களையெல்லாம் அவன் அவளுக்கு இறைத்துவிடத் துணிவானாகில் என்னசெய்வேனென்று மனமயங்கி ஆசையினாலே கண்ணீரைச்சொரிந்தனள எ-று. ()

௫-வது மலர்முற்றும்.

விபபிரலத்தாநாயகியினிலக்கணமும்

அவள்குணங்களும்.

செப்பியசார்படைந்துபதிவாராமையினிப்படிமோசஞ் செய்தானேயென், றொப்பிலதாமனத்துயரமுழப்பவள் விப்பிரலத்தையுணர்த்தன்றாட்கு, மெய்ப்பொருவேதனைநெடுமூச்செறிதல சகிகளைமுனிதல்விரகங்கூர்தன், மைப்படிவாள்விழிவழிநீர்மருவுதன்மூர்ச்சித்தலின்னவகைப்பண்பாமே.

(இ - ள்.) விப்பிரலத்தையெனபவள் தாங்கள் பேசிக்கொண்ட சங்கேதத்தலத்திற்குப்போய் நாயகன் வாராமையினாலே இப்படி மோசஞ்செய்தானேயென்று ஒப்பில்லாத மனவிசனத்தால் வருந்தும் நாயகியேயாம், சரீரத்தில் பெரியவேதனையுண்டாதல், நெடுமூச்சு விடுதல், சகிகளைககோபித்தல், விரகமதிகரித்தல், மைபொருந்திய வாள்போன்ற கண்களினிடத்து நீர்பொருந்தல், மூர்ச்சித்தல் முதலானவையீண்டுத் தெரிவித்த அந்நாயகிக்குரிய குணங்களாகும் எ-று. (௨0)

மூத்தாவிப்பிரலத்தைக் கிலக்கியம்.
கவிக்கூற்று.

பாங்கியர்தப்புமொழியானிகுஞ்சம்பட்டர்ந்துபதி
யாங்கிலனென்பதுகண்டுறநீங்கவறிகிலளாய்த்
தேங்கியகள்ளுணவண்டென்னமருண்டுதிசைதொறுமோர்
பூங்கிளிநோககுஞ்சுகவனநாதர்பொருப்பிடத்தே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரில் ஓரழகிய கிளிபோன்ற நாயகியானவள் சகிமாருடைய தபபுவார்த்தையால புதாவீட்டிறகுப்போய் அங்கே நாயகன்வராததைசுகணடு நிற்கவும் அதைவிட்டு நீஙகவும தெரியாதவளாய் நிறைந்த மதுவுணட வணடுபோலமயங்கித திசைதோறும் பார்த்தாள் எ-று. ()

மத்தியாவிப்பிரலத்தைக் கிலக்கியம்.
கவிக்கூற்று.

உற்றேகிகுஞசத்தொருவருமின்மையுணர்த்துயிர்ப்பாற்
பொற்றேனிதழ்வதஙகப்பாதிப்பற்பதிபூஞ்சுருளுஞ்
சற்றேதிறந்தகட்பார்வையும்வார்த்தைத்தழுதழுப்பும்
பெற்றேசுகவனர்வெற்பினின்றுளொருபெண்மறந்தே.

(இ - ள்.) ஒரு நாயகியானவள் புதர்வீட்டிறசென்று அங்கே ஒருவருமில்லாமையையறிநது பெருமூச்சினால் அழகிய தேன்போலு மினிமையைத்தருகினற தனது அதரங்கள் வதங்கிப்போகப் பாதிப்பற்பதிந்த பொலிவான வெறிலைச்சுருளையுங் கொஞ்சந்திறநத கட்பாாவைகளையுந தழுதழுத்துத் தடுமாறிய வாாத்தைகளையும் உடையவளாய்ச் சுகவனநாதர் மலைச்சார்பிலே யசைவின்றி தனது தேகத்தைமறநது நின்றாள் எ-று. (உஉ)



பிரபுடாவிப்பிரலத்தைச் சிலக்கியம்.
கவிக்கூற்று.

குறிவழினெய்தியங்கன்பனிலாமையிற்கூர்மயலை
யறிசகிமார்க்குஞ்சொலவில்லைத்தூதுமனுப்பவில்லை
மறிமருள்கண்ணிபுறம்பார்த்திடாதலர்வாளிபொரப்
பொறிமதனைப்பண்டெரித்தசுகவனர்ப்போற்றினளே.

(இ - ள்.) மானுமயங்கத்தக்க பார்வைகளையுடைய வொருநாயகியானவள் குறிப்பிட்டிருநத இடத்திறகுப்போய் அங்கே நாயகனில்லாமையால் உண்டாகிய விரகதவைதத் தனது மனதறிந்து சகிமார்களுக்குந் தெரிவிக்கவில்லை, அந்நாயகனுக்குத் தூது மனுப்பவில்லை, பக்கமெங்குந் திரும்பிப்பாராதவ

ளாய் மன்மதபாணங்கள் வருத்துதலாலே செல்வமிருந்த அந்த மன்மதனை முன்னாளிற் பொடியாக்கிய சுகவனநாதனாரை தியானித்துத் துதித்து நின்றாள் எ-று. (உங)

பரகீயாவிப்பிரலத்தைக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

நாணுநதியைக்கடந்துசர்ப்பத்தைநடுமிதித்
மாணுவிருடுணையாகக்குறிவையின்வந்துமன்பற
காணுமையால்விண்ணிடியைவெங்கூற்றின்கடாவொலியாப்
பேணுநின்றாளச்சுகவனர்வெற்பொருபெண்மெலிந்தே.

(இ-ள்.) அந்தச்சுகவனநாதர் மலைச்சாரிலொரு நாயகியானவள் வெட்கமென்னு நதியைக்கடந்து அல்லது வெட்கப்படாமல இயல்பான நதியைக் கடந்து வழிநடுவே பாம்பைமிதித்து மாகூதிமையற்ற விருளே துணையாகக் கொண்டு குறித்தவிடத்திறகு வந்தும நாயகனைக் காணுமையினுலே மேககர்ச்சனையை வெவ்விய யமனுடைய எருமைக்கடாவின சத்தமாகநினைத்து வருந்திநின்றாள் எ-று. (உச)

சாமானியாவிப்பிரலததைக்கிலககியம்.

கவிக்கூற்று.

காமாதுரரனைவோரையுமெத்துங்கபடியிவ
ளேமாறினளொருதூதிசொல்லாலென்றிசைந்தபுதர்
தாமாவறியவண்டாம்விழிகாட்டித்தளிர்க்கைகொட்டிப்
பூமாமுறுவல்சுகவனர்வெற்பிற்புரிந்ததுவே.

(இ-ள்.) காமவிருப்பின ரெல்லோரையும் மோசஞ்செய்கின்ற வஞ்சகியாகிய இந்தநாயகி யிப்போது ஒரு தூதிவார்த்தையினுலே மாறிப்போயினளென்று சுகவனநாதர் மலைச்சார்பில் அவளடைந்த புதர்வீடானது தாவியெழுந்த மாமரங்களறியும்படி வண்டுகளாகிய கண்களாறகாட்டி தளிர்களென்னுங் கைகளைக்கொட்டி மலர்களென்னுஞ் சிரிப்பைச்செய்தது எ-று. (உரு)

ச-வது மலர்முற்றும்.

கண்டிதாநாயகியினிலக்கணமும்
அவள்குணங்களும்.

அயல்வனிதைதனைப்புணர்ந்தவடையாளத்துடனுதயத்தனுகாநின்ற, நயபதியைமிகமுனியுநாயகிகண்டிதைகுணங்களுடுங்காலே, யியல்பொருளிலுரைபகர்தலின்னலொடுதவித்திடு மூச்செறிதல்வாளா,

வுயர்புதியசித்திரமொததுறுதல்கண்ணீர்கொளல் முதலென்றுணர்த் தலாமே.

(இ - ள்.) கண்டிதையென்பவள் வேறே யொரு நாயகியைக்கூடின அடையாளங்களுடனே வுதயகாலத்தில் வராநின்ற (நலம்பொருந்திய) நாயகனை மிகவுங்கோபிக்கும் நாயகியேயாம். ஆராயுங்கால்வழங்கிய அருத்தமில்லாதவார்த்தைசொல்லுதல், துனபந்தோய்ந்தவிக்கின்ற மூச்சுவிடுதல், உயர்ந்தபுதிய சித்திரத்தைப்போற சமமாவிருத்தல், கண்ணீர்கொள்ளல் முதலானவை யந்நாயகியின் குணங்களென்று அறிவிக்கலாம் எ-று. (உசு)

முத்தாகண்டிதைக்கிலக்கியம.

கலிக்கூற்று.

கலசக்குறிகடன்மார்பிடைத்தோன்றுவகாண்பளெனச்
சலசக்கையாற்சொந்நாயகன்றன்விழிதான்மறைக்கக்
குலபத்தினிவிளையாட்டிதுவென்றுளங்கொண்டிநின்றாள்
புலரிப்பொழுதிற்சுகவனநாதர்பொருப்பிடத்தே.

(இ - ள்.) சுகவனநாதாமலைச்சாரபிலே, சொந்தநாயகன் உதயகாலத்திற்றனமாரபிற்றோன்றுங் கலசக்குறிகளை யிவள்கண்டுகொள்வாளென்று தாமரைமலர்போன்ற கைகளால நாயகியின்கண்களைப்பொத்த அந்தக்குலபத்தினியிதுவுமொரு விளையாட்டென்று மனத்திநினைத்துநின்றாள் எ-று. (உஎ)

மத்தியாகண்டிதைக்கிலக்கியம்.

கலிக்கூற்று.

குதலையொருத்திசுகவனர்வெற்பிற்றன்கொண்கனெஞ்சி
லிதரதனக்குறிகண்டொன்றுமியம்பிலள்பின்
பதமியுயிர்த்திலள்பானுவுதயபருவமதில்
வதனமிலக்குதலபோலக்கண்ணீராவடித்தனளே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சார்பில் மழலைச்சொற்களையுடைய வொருநாயகி தன்மணவாளனைமார்பில வேறே தனக்குறியுண்டாயிருப்பதைக்கண்டு அவனுக்குநேராக, வொருவார்த்தையுஞ்சொல்லிலள், பின் பதட்டத்தினாலே பெருமூச்சுவிட்டிலள், சூரியனுதிக்குங்காலையிற் றனதுமுகத்தை விளக்குவதுபோலக் கண்ணீராவடித்தாள் எ-று. (உஅ)

பிரபுடாகண்டிதைக் கிலக்கியம்.

கலிக்கூற்று.

அன்னியமான்முகருங்குமநெற்றியணிந்துதயந்
துன்னியநாயகனைக்கண்டுயிர்ப்புவன்சொற்றவிர்ந்தோ.
மின்னிதுமங்களமென்னச்சுகவனர்வெற்பிலவன்
றன்னியலகாணசசகிகைக்கண்ணாடியையீந்தனளே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரலில் ஒருநாயகியானவள் தனது நாயகன் வேறொருத்தியினுடைய முகத்திலிருந்த குங்குமத்தைத் தனநெற்றியிலணிந்துகொண்டு உதயகாலத்தில வரக்கண்டு பெருமூச்சு கடினவார்த்தை முதலானவைகளொன்று மில்லாதவளாய இது மங்களகரமென்று நினைக்கும்படி அந்நாயகன் றனது தன்மையைத்தானே காணச்சமீபத்திருந்த சகியின் கையிலுள்ள கண்ணாடியைவாங்கி யவனிடத்திற கொடுத்தாள் எ-று. (உகூ)

பரகீயாகண்டிதைக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

மாற்றவடாயத்தணிதோய்கழுத்தொடுவானுதயத்
தேற்றபதிவரக்கண்டயலோர்க்கஞ்சியேகடுஞ்சொற்
சாற்றலளாய்க்கட்புனலவிரற்கொண்டுபிற்சார்ந்தசகி
மேற்றெளித்தாண்மெய்ச்சுகவனர்வெற்பொருமெல்லியலே.

(இ - ள்.) மெய்ம்மைபொருந்திய சுகவனநாதர் மலைச்சாரலில் ஒரு நாயகியானவள் தனக்கேற்ற நாயகன வேறொருத்தியினுடைய தாயத்துச்சரம் அழுந்தின் கழுத்துடனே பெருமைதங்கிய வுதயகாலத்தில வரககணடு அயலோர்க்குப்பயந்தே கடினவார்த்தைகளொன்றுஞ் சொலலாதவளாய்த தனது கண்களிலுண்டாகிய நீரை விரலாலெடுத்துப் பககத்திலேயிருநத சகியின்மேறபடும்படி தெளித்தாள் எ-று. (௩௦)

சாமானியாகண்டிதைக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

சேர்த்திடுகொங்கையுதயத்துன்மார்பிற்றெரியுதடா
பார்த்திடவேடிக்கையாயெனக்கீய்ந்தபணந்தவிரப்
பூர்த்தியுடன்பணியொன்றருளென்றொருபூவையன்ப
னோர்த்திருவாழிபறித்தாள்சுகவனர்நீணிலத்தே.

(இ - ள்.) சுகவனநாதர் நெடியநாட்டின்கண் ஒருநாயகியானவள் பிரியனைநோக்கிச் சிறப்புப்பெறற தனக்குறிகள் இநத வுதயகாலததிலே யிதோ வுனது மார்பிற்றெரிகின்றன பாரடா வேடிக்கையாகப் பார்த்துப்போகலாமென்றெனக்கு முன்னே கொடுத்தபணத்தை யல்லாமலும் இப்போது மனப்பூர்த்தியுடனே ஓராபரணத்தை யெனக்குக்கொடு நீயென்று சொல்லிக்கொண்டு அந்த நாயகனுடைய பொலிவான வழகுதங்கிய மோதிரத்தைப் பறித்துக்கொண்டாள் எ-று. (௩௧)

௫ - வது மலர் முற்றும்.

கலகாந்தரிதாநாயகியி னிலக்கணமும்
அவளகுணங்களும்.

அன்பனைவெஞ்சினத்தாலெண்ணாது நிந்தித்தவமானித்தகற்றிசென்
ற, பின்புகுழைந்தாகுலிக்கும்பேதைகலகாந்தரிதைபெருமூச்சிடு
வன்பிரமைபரிதாபமதனவேதனையழுகைவகைககாகாச்சொ [லோர்.
லென்பமுதலானவை மறறிவள்குணங்களாக வெடுத்திசைப்பர் மே

(இ - ள.) கலகாநதரிதையெனபவள் கோபததினாலே மதியாமற றனது நாயகனைநிந்திதது அவமானபபடுததி வெளியேதுரததிவிட்டு அவனபோனதி னபின மனஞிரஙகி விசனபபடுமம நாயகியேயாம், பெருமூசசு, வலியமயககம, பரிதாபம். விரகவேதனை, அழுகை, உபயோகமறறவாாததை முதலானவைக ள இநநாயகியின குணங்களாக வெடுததுசசொலவா முனனோா எ-று. (ருஉ)

முததாகலகாநதரிதைதகிலக்கியம.
கலிககூறறு.

சினந்தேகுநாதன்பினசென்றுபசாரஞ்செயாடனது
மனந்தேர்சகிமுதலோர்ககுவெடகததினவ்வாறுசொலாள்
கனந்தோய்சுகவனாநாடடிளங்காலபொரக்கட்புனல்கொண்
டனந்தாழ்சிறுநடைமின்படுகனைககுளயர்ந்தவளே.

(இ - ள.) அனனமுங் கீழமைபபடுகினற சிறியநடையினையுடைய வொ ருநாயகியானவள கோபிததுக்கொணடு போகினற நாயகனுக்குப பினனே சென்று போகவேணடாமெனறு உபசாரமொனறுஞ்செய்யமாட்டாள் வெட் கததினாலே தனது மனதறிநத சகிமுதலானவாகளுககு அவவகையைத் தெ ரிவியாள, கனமபொருநதிய சுகவனநாதாநாட்டில இளமையான தென்றலா னதுவீசி வாதிக்கக கண்களிலே நீாபொருந்தப்பெற்று படுககைககுளளே வரு ந்தி மெலிகுவள எ-று. (ருரு)

மத்தியாகலகாநதரிதைதகிலககியம்
கலிககூற்று.

இடர்சகிமாாககுசசொலாவிடிற்றீருவதில்லைசொலல
மடநெடுவெட்கமவிடாதென்செயவோமெனவலலவனற்
றொடர்கலகஞசொலவன்னவாபாற்சென்றுஞ்சொல்கிலளா
யுடனெதிர்சென்னிவளைத்தாள்சுகவனருர்வஞ்சியே.

(இ - ள்.) சுகவனநாதர்தலத்தி லொரு நாயகியானவள் நமது மனவரு ததத்தைச் சகிமாாகளுக்கு நாம் சொலலாவிட்டால் தீருவதில்லை, சொல்வதற் கோ அறியாமையையுடைய நெடிய வெட்கமானது நம்மைவிடமாட்டாது இ

தறகொணடசெயவோ மெனறொருவாறு துணிநதனனு நாயகனறனொடா நத கலகததைதத தெரிவிபபசறத ஆததச சகிமாசளிடததிலவநதும ஒனறுஞ சொலல மனமிலலாசவளாய உடனே யவாசனுககு நேரே தலையவளைதது நினறுள எ-று. (௩௪)

பிரபுடாகலகாநதரிதைககிலககியம.

கவிசகூறறு.

வாதுககிங்கேபாமடிவாபோதுணிநதனைவாளவிழிகா
ளேதுககெசஙகோனமுலைசிவநதீாகைகாளவிளைநதேனகலக
நீதிததபாகவிளைததீாநனனெனாநினைருவரோ
சோதிசசுகவனாநாடடெனறொரு தயிலசோநதனளே

(இ-ள்) ஒருநாயகியானவள் அறியாமையையுடைய ஏனவாயே இங்கேன வாதுபேச நீதுணிநதாய, வாளபோனற கணகளே நீஙகள ஏன நாயகனுககெதிரே யேதுககுசசிவநதீாகள, கைகளே நீஙகளேன கிரமபபிசகாவிளைநத கலகத்தைவிளைததீாகள, மூடாகள நனமையை நினைதது அறிவாகளோ ஞானபபிரகாசததையுடைய சுகவனநாதா நாடடினிடததெனறுசொலலி விசனததாறசோநதாள எ-று. (௩௫)

பரகியாகலகாநதரிதைககிலககியம.

தலைவிசொலலியது.

தயிரியபநதயம்போயிறறனறேவெடகருநாயநதுறறோ
செயிரொழநொநதனர்வாயககாலகளானதிரைநநிக
ளுயிரினுமன்பனைப்போபோவெனறேனசினநதுளளதனறே
பயிலவிதியினபயனயாாககுஞசுகவனாபாரிடததே

(இ-ள்.) தயிரிய பநதயஙகளெலலாம அனறேபோயின. வெட்கமும அவவாறேபோயிறறு; உறவினரெலலாம குறறமுடையவாகளாய நொநதாாகள, ஆலைகளையுடைய நதிகளெலலாம வாயககாலகளாயின நானெஙஙன நடநதும இபபோது எனனுயிரினும பிரியமுடைய என நாயகனைத திரஸகரிததுபோபோ வெனறு தூரததினேன சுகவனநாதாநாடடில யாருககும பொருநதிய விதிப பயன உணமையானதனறே எ-று. (௩௬)

சாமானியாகலகாநதரிதைககிலககியம.

தலைவிசொலலியது.

உயாபொறகுவிபலதநதுஞசுகவனரூரிலெனபாற
றயவுறறுசசம்பளமிலலாமறசேவகததன்மைசெய்த
நயசிததசன்பிழையொனறேன்பொறுதினறுநாணசினநதேன
வயதுசசிறிககிடைகயோபிடாிமதியுணமையே.

(இ - ள்.) சுகவனநாதர் நகரத்திலேயாக பலசொர்ணக்குவியல்களை யெடுத்துக்கொடுத்தும் என்மேற் பக்ஷமிருந்து சமயமில்லாமலே சேவகத்தன்மைசெய்துகொண்டு இருவரையுங் கூட்டிப் பொருந்திய மன்மதனை அந்நாயகனுடைய வொருதப்பிதத்தைப் பொறுத்துக்கொள்ளாமல் ஏனவனையின்று நான்கோபிக்கிறேன் ஐயோ வயதுசிறியர்களுக்குப் பிடரிமேற் புத்தியென்பது சத்தியமே. (௧௭)

௬ - வது மலர் முற்றும்.

புரோடிதபதிகாநாயகியினிலக்கணமும்
அவள்குணங்களும்.

தனதுநகர்விடுத்துமறுநலத்திலிறசென்றுறைந்தசொந்தத்தலைவன்றன்னை, மனதுதனினினைத்துருகிமழைமுகிலகாணுமயிலைபோல் வருந்தாநின்ற, வனநிகருநடையுடையவளிவை புரோடிதபதிகையவத்தைபத்தும், பனகபணகடிதடவபபைந்தொடிதன் குணங்களெனப்பகரலாமே.

(இ - ள்.) புரோடிதபதிகை யென்பவள் தனது நகரத்தைவிட்டுப் புறப்பட்டுப்போய் மறுதேசத்திலிருக்கின்ற சொந்தநாயகனை மனதிலே நினைத்துருகி (மழைமேகத்தைக்காணுத மயிலைப்போல) வருத்தப்படுகின்ற (அன்னம்போலு நடையினையுடைய) நாயகியேயாம், தசாவத்தைகளும் (சாப்பபடைத்தையொத்த வலகுலையும் பசியவளைகளையுமுடைய) அந்நாயகியின குணங்களென்று சொல்லலாம் எ-று. (௧௮)

முத்தாபுரோடிதபதிகைக்கிலக்கியம்.
கலிக்கூற்று.

அல்லல்சகிகட்குணர்த்தாள்பைம்பாசியணையடுத்து
மெல்லவதிற்றுயிலாள்வெள்கிக்கட்புனல்விஞ்சவிடாள்
சொல்லமிடறிறுக்காள்பதருளிச்சுகவனநூர்
வல்லவியெண்ணத்தைமன்மதனேயறிவான்மதித்தே.

(இ - ள.) சுகவனநாதர் நகரிலொருநாயகியானவள் தனது மனவருத்தத்தைச் சகிகளுக்குத் தெரிவியாள், பசிய நீரப்பாசியாற்செய்த சயனத்தையடுத்தும் வெட்கத்தாலதிற படுத்துறங்காள், கண்ணீரை யதிகரிக்க வெளியில்விடாள், வார்த்தைபேசுவதிற் றொண்டையை யிறுக்கிக்கொள்ளாள், பதறமாட்டாள், இவளெண்ணத்தை மன்மதனே மதித்தறிவான எ-று. (௧௯)

மத்தியாபுரோடிதபதிகைக்கிலக்கியம்.
தலைவிசகியைவினவுதல்.

பண்டுளவேயிவ்வளையனைனுங்கலைபாக்கினிசை
வண்டுழல்வேனிலிலவேறுகத்தோன்றியவாறென்னசொல்
விண்டுவணங்குஞ்சுகவனநாயகர்வெற்பின்மிசைச்
செண்டுவருந்தத்திரண்டெழுபூண்முலைத்தேன்மொழியே.

(இ - ள்.) திருமால் பணியாநின்ற சுகவனநாதர் மலையின்மேற் புட்பச்செண்டுகளுந் தோற்று வருந்தும்படி திரண்டுவளர்ந்த ஆபரணங்களையணிந்த முலைகளையும், தேனைநிகர்த்த சொற்களையுமுடைய சகியே, இந்த வளைகளும் அனைனும் தகிலும் முன்னிருந்தவைகளோ, பார்க்குமிடத்துக் கீதங்களைப் பாடுகின்ற வண்டுகள் சுழன்றுலாவும் வசந்தகாலத்தில் இவைகள் வேறுகத் தோற்றிய காரணமென்னசொல் எ-று. (சo)

பிரபுடாபுரோடித்பதிகைக்கிலக்கியம்.
கவிக்கூற்று.

முத்தாரமுமனைனுங்கமலமுகிழ்வடமும்
பத்தாநடந்தவன்றேபினனடந்தனபாசிபந்து
சத்தாமுயிருளதோவிலதோவெனத்தானறிய
வித்தாரிமுன்கைசுகவனர்வெற்பிலவிரைந்துறறதே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரி லொருநாயகியின முத்தாரங்களும் அனைனுந் தாமரையரும்பின் சரங்களுந் தனதுநாயகன ஊரபயணம்புறப்பட்ட வப்போதே அவனபினனேபோய்விட்டன இப்போது இவளுக்குச்சத்தாகிய பிராணனிருக்கின்றதோ விலலையோவென்று நாடிப பார்த்தறியும்பொருட்டு வேகமாக பாசிபந்தானது விரப்பன்னியாகிய அவள முனகையை யடைந்தது எ-று. (சுக)

பரகீயாபுரோடிதபதிகைக்கிலக்கியம்.
கவிக்கூற்று.

அம்மாமிநல்கம்புயப்பூவைப்பார்ப்பளலதுதொடா
ளெம்மாயமோவென்றிரங்குநங்கைக்குமெதிர்புகலாள்
விம்மாவிகுளையர்சொற்குமனத்துள்விடைகொடுப்பள்
சும்மாசுகவனர்நாட்டுபிர்க்காள்வஞ்சிசோர்ந்தஞ்சியே.

(இ - ள்.) சுகவனநாதர்நாட்டில் வஞ்சனைமிகுந்த வொருநாயகியானவள் தனது அழகிய மாமியாள் கொண்டுவந்துகொடுத்த தாமரைப்பூவைக்கண்ணுற் பார்ப்பளேயல்லது கையாற் றெடமாட்டாள், இவளுக் கென்ன மாயா

வஸ்தையோ வநதுளதென்று விசனப்படுகின்ற நங்கைக்கெதிர் மொழியொன்றுஞ்சொல்லாள், விம்மிச்சகிமார்களவாராததைக்கு மனத்தினுள்ளே விடைகொடுபபள், சுமமாவருநதி அன்னியாகதுப் பயநது பெருமூச்சு விடாதிருப்பள் எ-று. (சஉ)

சாமானியாபுரோடிதபதிகைக்கிலக்கியம்

கவிக்கூற்று.

அன்பு நம்மீதிலுடையாளிவளென்றறிந்துநண்பன்
பின்புதனங்களனந்தமுதவப்பெறுவதெண்ணித
தெனபுயாகண்ணின்மிளகுறைததிட்டுச்சிமிட்டிநின்று
மென்புனல்காட்டுந்தெருவிற்சுகவனர்வெற்பொர்மின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரபில ஒருநாயகிடானவள நம்மீது அதிக பிரியமுடையவ ளிவளென்று தெரிநது நாயகனுனவன பினனநேகபணங்கள் சொணடுவநதுகொடுககத தான் பெறறுக்கொள்ளலாமெனறு நினைதது த் தெனபுபொருநதிய தனது கணணில் மிளகையுறைததுததடவித தெருவிலே நினறு சிமிட்டி மெலலியநீரை உணடாக்கிக்காட்டுவள எ-று. (சங)

எ-வது மலர்முற்றும்.

அபிசாரிகாநாயகியினிலக்கணமும்,

அவள்குணஙகளும்.

தனைத்தலைவனனுசரிக்கத்தானவனையனுசரிக்கத்தகுந்தசெய்வா
ணினைத்தவபிசாரிகையந்நேரங்கட்கேற்றவணிநிறைத்தல்சங்கை
கனத்தமதிவலிகபடமரியவினைமுயற்சியைந்தக்கன்னிபண்பா
மனத்தைநிகர்சுவீயைபரகீயையபிசாரிகைகட்கற்றமொன்றே.

(இ - ள.) (மதித்த) அபிசாரிகையெனபவள் நாயகன் றன்னை யனுசரிக்கவாவது, தான் அவனை யனுசரிக்கவாவது, தகுநதவைகளைச்செயயும் நாயகியேயாம். அவ்வவ் வேளைகட்கேறற வாபரணங்களை நிறையத்தரித்தல்; சந்தேகம் (கனதத) புத்தி, வல்லமை, கபடம், அசாத்திய காரியமுயறசி, இநத வைந்தும் அந்நாயகியின் குணங்களாகும் (அன்னமபோன்ற) சுவீயாபிசாரிகைக்கும், பரகீயாபிசாரிகைக்குஞ் சமயமொன்றே எ-று. (சச)

முத்தாபிசாரிகைக் கிலக்கியம்.

தலைவிக்குச் சகிசொல்லியது.

மேககணிதன்பயணநிமித்தம்விளக்கமின்றுந்
தோகையிருமுறந்தாள்சுவர்க்கசோழிசுபமொளித்த
நாகரிகநிகுஞ்சஞ்செலற்கீதுநலசமயம்
வாகர்சுகவனர்வெற்பணங்கேயெழுவாய்மகிழ்ந்தே.

(இ - ள்.) அழகிற சிறந்தவராகிய சுகவனநாதர் மலைச்சாரில வசிக்கு ங் கன்னிகையே! மேகமென்னுங் கணிதவான்பயணததிறகுரிய நிமித்தத்தை விளங்கக்காட்டினன்; மின்னலென்னுஞ் சகி யிருளையோடும்படி விலககினள; சுவர்க்கோழிகள் சுபமாக வொலித்தன; நாசரிகமான புதாவீட்டிறகுப்புறபப ட விதுவே நல்லசமையம ஆகலால, நீ மனமகிழநதெழுவாய எ-று. (சரு)

மத்தியாபிசாரிகைக் கிலககியம்.

தலைவன றலைவியொடு சொலலியது.

நாகமிதித்துவருவாயென்பொற்புயநண்ணவொவ்வாய்
மேகவிடிககுமங்கருசாயிங்கென்சொலவெறுத்து மூக
கோகனகத்தைத்திருபபுவையென்செய்குவதிதறகு
மாகர்துதிக்குஞ்சுகவனநாதர்வரைமயிலே.

(இ - ள்.) தேவாகள புகழாநினற சுகவனநாதர் மலைச்சார்பில வசிககும் மயிலே நீ வழியிலே சர்பபஙகளையு மிதிததுவருவாய், எனது புயஙகளிற பொருந்தச் சம்மதிககமாட்டாய், மேககாச்சனைக்கு மஙகே பயப்படாய, இங் கே யென மிருதுவசனஙகளை வெறுதது உனது தாமரைமலர்போனற முகத தைத் திருபபிககொள்வாய், நானிதறகென்னசெயவது எ-று. (சசா)

பிரபுடாபிசாரிகைக்கிலககியம்.

கவிககூற்று.

தனபாரநின்னிடைதாங்காதிருளிற்றளிரடியா
லனமேயெவ்வாறுசெல்வாயென்றபாங்கியையாயிழைபார்த்
தெனதாமதேரதமுங்காமபாகனுமிஙகிருக்கப்
பினபோதுதாழ்வுசுகவனர்நாட்டெனப்பேசினளே.

(இ - ள்.) அன்னம்போலபவளே முலைகளாகிய பெரியபாரத்தை உனது சிற்றிடை பொறுககமாட்டாது, அன்றியும் இநதக் கடினவிருளிலே தளிர்போ ல் மிருதுவாகிய பாதஙகளைக்கொண டெப்படிநீ நடநதுசெலவாய் எனற சகி யை அநத நாயகிநோக்கி யென்னுடைய மனமாகிய தேரும, மனமதனுகிய சாரதியு மிஙகேயெனக்கு அமைந்திருக்கச் சுகவனநாதாநாட்டிற பினபென்ன குறைவென்று சொல்லினள் எ-று. (சஎ)

பரகீயாபிசாரிகைக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

இரவேபகல்புயலேகதிர்வல்லிருளேயொளிவெங்
கரவாகியவழியேமார்க்கங்காடுகளேபடுக்கை
தாலைமெத்தையுடைமுந்தியேயெனத்தான்றிரிவள்
விரகானலத்தினெருத்திசுகவனர்வெற்பிடத்தே.

(இ - ள்.) சுகவனநாதா வரைக்கண் ஒருநாயகி தனது விரகாக்கினியினா லே இராத்திரியே பகல், மேகமே சூரியன, வலியவிருளே பிரகாசம், வெவ் வியதிருட்டுவழியே நலவழி, காடுகளே படுக்கைவீடு, சேலை முனைகளையே பசுவமான நீலோற்பல மலரிணையெனுமபடி தான சஞசரிபபள் எ-று. ()

சாமானியாபிசாரிகைக்கிலக்கியம்.

கவிசகூற்று.

பரிபுரமாடவளைகளபண்பாடப்பணைதகமுலை
சரிசரியென்றுகுலுங்கவுலலாசத்தனிநடைபெற்
றுரியபொன்னுசைபிடித்துநதநண்பனுறையுள்வந்தா
ளரியசுகவனாவெறபிலொருததியனகாதடதே.

(இ - ள்.) அருமையான சுகவனநாதா வரைககண் ஒருநாயகி பாதச்சில மபுகள கலகலெனறுகூவுற, வளைகள் அதறகுததக்க பண்களைப் பாடுவனபோ லொலிககவும பருத்தமுலைகள இவ்விரணடுஞ் சரிசரியெனறு மகிழ்வனபோ ற பூரித்துககுலுஙகவும். உலலாசமாய் ஒபபறற நடையை யுடையவளாய்ப் பொருளாசை பினனேநினறு தனனைபபிடிததுத தள்ளிவிட நாயகனிருக்குமி டததைததேடி யனனம்போல வநதனள எ-று.                                   (சக)

சநதிரிகாபிசாரிகைக்கிலக்கியம்

கவிக்கூறறு-

சலைமதிதோன்றியபோதினிற்றுனுங்கலைமதிபெற்
றிலைதிகழ்பூணினளன்பனிருககுமிடங்குறிதது
மலைமுலையேநதிநெடுமாலெனுமபடிவந்தனளா
லலைநதிசூடுஞ்சுகவனநாதரணிவெற்பினே

(இ - ள்.) அலைகளோடுகூடிய கஙகாநதியைத்தரித்த சுகவனநாதரது அ முகியவரைககண் இலைவடிவாகப் பிரகாசிக்கும ஆபரணததையணிந்த வொரு நாயகியானவள சலைகளையுடைய சநதிரனுதித்த சமயததிலே தானும சினனு பினனமாககலைநத அறிவையுடையவளாயக கோவாததனமலையை முலையி லமாகிய ஆயாபாடியிற குடைபோலெடுததுநினற திருமாலுக்கொப்பாக அ லஙகரிதத முலைகளைததாங்கி யிவள்கொண்டது நெடியவிரகமென்று எவரும் நினைககும்படி நாயகனிருக்குமிடததைத தேடிவநதாள் எ-று.              (ருo)

திவாபிசாரிகைக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

பகியரசன்சொற்படிககேலிழாவணிபார்த்துவர
விதிமுறையாருஞ்செலும்போதுதாமும்விரைந்துடன்போ
யதிகவலுவமிருபபதுபோறபின்னின்றுடினரோர்
மதிமுகமாதும்புமானுஞ்சுகவனர்மண்டலத்தே

(இ - ள்.) சுவனநாதர்நாட்டிற் பட்டினத்திராசன் கட்டளைப்படிக்கே திருவிழாப்பார்த்து வருவதற்கு கிரமமா யனைவரும் செலகின்றபோது தாங்களும் அவர்களுடனே விரைவாகப்போய் இடையேயதிகமானசோலியேதோ தமக்கிருப்பதுபோற் பின்னிட்டுநின்று சந்திரனையொத்த முகத்தையுடையவொருநாயகியும் நாயகனும் கலந்து விளையாடினார்கள் எ-று. (௫௧)

நாயகிகளின்விரிதொகை.

முதல்வகுத்தநாயகிகள்பதினாறுவருந்திறத்தான்முறையேயிந்த
விதமடுத்தவெண்மர்களாய்விளங்குவரவ்வாறு தொகைவிரிகருங்காலை
யிதமிகுத்தநூற்றிருபத்தெண்மருத்தமா திகுணவியைபாலன்றே
ருததிசுற்றுமூலமின்மூன்னூற்றெண்பத்துநால்வர்களாயோங்குவாரே

(இ - ள்.) முதற்குச்சத்தில வகுத்துப்போந்த பதினாறுவகை நாயகிகளும் தனித்தனி ததகம் ஏதுக்களாற கிரமப்படியிவ்விதமாக இநதக்குச்சத்திலமைந்தசுவாதீனபதிகாதி அட்டநாயகிகளாயப்பிரகாசிப்பா, அவ்வாறேதொகையைவிரிககுங்கால (இனிஃமமிகுந்த) நூறறிருபதசெட்டு நாயகிகளாவர், அவர்கள் உத்தமாதிகுணசம்பநததால (கடலசூழநதபூமியினகண) மூநநூறறெணபத்துநானகு நாயகிகளா யுயாவார்கள எ-று. (௫௨)

இதவுமது.

இத்தகையரினந்திவ்வியாதிபேதத்தாலாயிரத்துநூற்றைம், பத்திருவராஞ்சாதிபேதத்தாற்கணக்கிடிற்பறபலராய்நிற்ப, ரத்தகையசுவாதீனபதிகாதிபேதமுததைக்கமையாவேனு, முத்தமமுன்னூலுளவென்றுணாத்துமென்பர்சிலரதுகொண்டுணர்த்தாமன்றே.

(இ - ள்.) இத்தனமையையுடைய முநநூறறெணபதது நானகுநாயகிகளும், இனனந் திவ்வியாதிபேதததால ஆயிரத்து நூறறைம்பதஇரணடு நாயகிகளாவர், சாதிபேதத்தாற கணக்கிடப்புகின் அநேகராயநிறபர், (அநதபபெருமைதங்கிய) சுவாதீனபதி காதிபேதஙகள முதனதைக்குப் பொருநதமாடடாதுகளென்னினுஞ் சிலகிரநதகர்த்தாகள் (நன்மையினையுடைய) முனனூல அப்பேதங்கள் முத்தைக்கும்பொருநதுமென்று அறிவிக்குமென்பா, ஆதலால அவவுறுதிகொண்டு நாமும் அவ்வாறேசொல்லினோம் எ-று. (௫௩)

அ-வது மலர்முற்றும்.

இன்னுஞ்சிலநாயகிகள்வருமாறு.

இன்னவிதநாயகிகளெவரினுஞ்சம்பந்த மொன்றுமிலராயின்னும், பன்னரியபிரவச்சற்பதிகையெனறுஞ்சமாகச் சற்பதிகையென்றும், வன்னமுலைநாயகிகண்மற்றிருவருளரொன்பர்வடநூல்வல்லோ, ரன்னவர்தமிலக்கணமுமமைகுணமுமினிவிவரித்தறைதுமாதோ.

(இ - ள்.) இந்தவிதமாகவழங்கிய பலநாயகிகளினுஞ் சம்பந்தமொன்று மில்லாதவர்களாய்ச் (சொல்லுதற்கரிய) பிரவச்சற்பதிகையென்றுஞ் சமாகச்சற்பதிகையென்றும் (அலங்கரிக்கின்ற முலைகளையுடைய) நாயகிகள் மற்றுமிருவர்களுண்டென்று வடநூலாசிரியர் சொல்லுவர்; அந்நாயகிகளினிலக்கணமும் அவர்க்கமைந்தகுணமும் இனி விவரித்துச்சொல்வோம் எ-று.

இப்பெயர்களை வடநூலார், ப்ரவச்சத்பதிகா, சமாகச்சத்பதிகாவென்பர். (௫௪)

பிரவச்சற்பதிகாநாயகியினிலக்கணமும்,

அவள் குணங்களும்.

அக்கணத்திலூர்ப்பயணமதுசெயநிச்சயித்தபதி யணங்கேநீங்காப், பக்கமுற்றபிரவச்சற்பதிகைமனத்துயர்மருண்டபார்வைதாப, மிக்கடுத்தமூர்ச்சைபெருமூச்சுமிடறிறுகியசொலவெள்ளம்போலு, மைக்கயற்கண்ணீர்பயணத்தடைக்குறியினனவவள்பால்வருபண்பாமே

(இ - ள்.) (நீங்காப்பிரியம்பொருந்திய) பிரவச்சற்பதிகை யென்பவள் அந்தக்ஷணத்திலே ஊர்ப்பயணஞ்செய்ய நிச்சயித்தபுருடனையுடைய நாயகியேயாம், மனவருத்தமும், மருண்டபார்வையும், தாபமும், மிகவுண்டாகிய மூர்ச்சையும், பெருமூச்சும், தொண்டையிறுகியசொலலும், (மையெழுதிய கெண்டையொத்த) கணகளில வெள்ளம்போலோடுகின்றநீரும், பயணத்தடைக்குறியு முதலானவை அந்நாயகியினிடத்து வருங்குணங்களாம். (௫௫)

முத்தாபிரவச்சற்பதிகைக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

தலைவன்பயணஞ்சொலவுடனேயுட்டளர்வினளா
யலைமென்கொடிமுகம்பாதிவளைக்கவதுதெரிந்து
நிலையங்கவன்பிரியாதச்சுகவனர்நீள்வரைமின்
முலையொன்றிடக்குயிலபோற்சகிகாவின்முழங்கினளே.

(இ - ள்.) நாயகன் றனது பயணத்தைத்தெரிவித்தவுடனே மனவருத்தமுடையவளாய அலைகின்ற மெல்லிய கொடிபோலும் நாயகியானவள் தன்முகத்தைப் பாதிவளைக்கச் சகியதை யறிந்து நிலைமையையுடைய வந்நாயகன் பிரியாதவனாகி சுகவுனநாதரது நெடியவரைக்கண் அந்தநாயகியின் முலைகளில் ஆலிங்கனஞ்செய்து கொள்ளும்படி சோலையிற்போய் நின்று குயில்போற் சத்தித்தனள் எ-று. (௫௬)

ஈத்தியாபிரவச்சற்பதிகைக இலக்கியம்.

கவிக்கூற்று.

அயல்போவதனைசுகவனர்வெற்பனடுந் துணர்த்தக்
கயலேர்விழிப்புனல்காட்டாடைச்சொற்களைப்புகலா
ளியல்பாமுயிர்ப்புங்கொளாடன்றலையெழுதநீதெனுமச
செயல்போலநெற்றியைத்தொட்டாளடிக்கடிசேயிழையே.

(இ-ள்.) சுகவனநாதர் மலைச்சார்பிற நனது நாயகன் மறுதேசததிறகுப புறப்படுஞ்செய்தியைத் தனனிடததில அறிசதறிவிகக, அபபோது கெண்டை மீன்போ லழகியகண்களிலே நீரைாவடியாள, தடைசசொறகளொனறுஞ்சொல்லாள், இயல்பாகிய நெடுமூச்சும விடாள, தன தலையெழுததநீதவெனறு காட்டும் அச்செய்கைபோல் அடிககடி அநநாயகி தனது நெறறியைததொட்டாள் எ-று. (ருஎ)

பிரபுடாபிரவசசறபதிகைக இலக்கியம.

கவிககூறறு.

பயணசித்ததனையன்பனசொலவெள்ளியிலைபாகுநலமித்
தயவிருக்கட்டுமுறாயும்போய்வருகதடம்புயவெள்
ளியல்சுபச்செயதியினிக்கேட்பையிவ்வளவேயெனமன்
னயனுறத்தானறிவித்தாள்சுகவனர்நாட்டணங்கே.

(இ - ள்.) நாயகன தான பயணசிததமாயிருப்பதைச சொல்லியமாத்திரத்தில் அவன்கையில் வெற்றிலைபாக்குக்கொடுதது உமக்கெனமேலைபபோது நீ தயவிருக்கட்டும், போய்வாரும் விசாலிதத புயங்களையுடையவனே, யெனது நடக்குஞ் சுபசசெயதியை யினிக்கேட்பாய, இவவளவேதானெனறு சுகவனநாதர் நாட்டினகண அந்தநாயகி நலல மகிழசசிபொருநதத தெரிவித்தாள் எ-று. (ருஅ)

பாகியாபிரவச்சற்பதிகைக இலககியம.

தலைவிதலைவனுக்கு சொலலியது.

மாமணக்கேள்வற்றுரும்பாக்கினேனத்தைமாமனுக்கு
நாமமிட்டேனறிகெட்டேனுனைநம்பிநான்பயண
நீமதித்தாய்விடுமாவுழ்சுகவனர்நீள்வரையோய
காமவெப்பூடுவிழுறகுமிந்தககசட்டுடற்கே.

(இ - ள்.) சுகவனநாதர் நெடியமலைககண வசிக்குமனபனே! உனையே சதமாகநம்பி யெனது சொந்தக்கணவனை நான் ஒருதுரும்பாகப் பாவித்தேன், அத்தைக்கும் மாமனுக்கும் நாமம்போட்டேன், கிரமங்களையும் விட்டேன, இ

பபடியிருக்க நீ ஊரப்பயணஞ்செய்யத் துணிந்தாய், ஊழ்வினைவிடுமா, இந்த பபாவியினுடைய குறறமான வுடம்புக்குக் காமாக்கினி வெப்பததில வீழ்வது தருமம எ-று. (ருகூ)

சாமானியபாபிரவச்சற்பதிகைக் கிலக்கியம்.

கவிககூறறு.

அகல்வேனென்றன்பன்சொலநாதவென்மெய்யதன்முனெய்த்து
மிகவேவளைகைநழுவினபாரநின்விரலணியும்
புகலாமிதிலென்றவன்மோதிரத்தையப்போதுமெத்திக்
ககநேருநோககிசுகவனர்வெற்பிற்கவாந்தனளே.

(இ - ள்.) சுகவனாரதர் மலைச்சாரபிற பாணங்களைநிகாத்த கண்களையுடைய வொருநாயகியானவள் தனதுபிரியன வேறோ ஊர்க்குப புறபபடுவேன் எனறுசொலல வோபிராணநாதா அதறகுமுன எனது சரீரமெலலாமிளைத்துமிகவுங் கைவளை நழுவிபபோ னை இதோ பாருனது மோதிரமும இதிற்புகுவதாகுமெனறு அப்போதும அவனகைமோதிரத்தை யெதிப்பறித்துக்கொணடாள எ-று. (கூ0)

ரூ வதூ - மலர் முற்றும்.

சமாகச்சறபதிகாநாயகியின் லைககணமும் அவ ரகுண ஙகளும.

பதிமறுதேசத்திருந்துவரககண்டாள்சமாகசசற்பதிகையாமத்
தநியெழபேருவகைபுளகதிசயநோககொடுவிரகசாந்திமுர
லதிவிதமாமுனனுரைபாராட்டனமுகமலாசசியொன்றுமறிவுறுமை
யெதிரதருமானந்தவிழிப்புனலகுறிபபுமுடிதன்முதலிவள்பண்பாமே.

(இ - ள்.) சமாகச்சற்பதிகையெனபவள தனது பதிதேச சஞ்சாரத்திலிருந்து வரககாணு நாயகியேயாம். அபபோதேயுண்டாகிய பெரியமகிழ்ச்சியும, புளகாங்கிதமும, அதிசயமான பாாவையும், விரகஞ்சாந்தப்படுதலும், புனசிரிபபும், வேடிக்கையாக முந்திய சமாசாரஙகளைப பேசிப்பாராட்டுதலும, முகமலாதலும், எனறுமறியாதிருததலும, தோனறுகினற ஆனநதபாஷ்பமும், குறிபபுநிறைவேறுதலும், முதலானவை யிநதநாயகியின் குணங்களாம் எ-று. (கூக)

முததாசமாகச்சற்பதிகைக் கிலக்கியம்.

கவிககூறறு.

இத்தனைநாட்சென்றும்வாராதவென்னின்னமென்றிரங்கு
மதததியன்பன்புகமுலைவேர்வையடியலம்புஞ்
சுததநன்னீரொனத்தந்துநகைவெண்டுணரினாச்சித்
துத்தமிசேக்கைசுகவனர்வெறபிடத்துற்றனளே.

(இ - ள்.) இவ்வளவு நாளாகியும் இன்னம் வராமலிருப்ப தென்னவென்று வருந்தும் அந்தச்சமயத்திலே நாயகன் வரக்கண்டு தனது தனங்களிலுண்டாகிய வேர்வையை யவனுக்குக் கால்கழுவும் சுத்தமான நல்லநீராகக்கொடுத்து சிரிப்பாகிய வெள்ளியபுட்பங்களால் அவனை யரிச்சித்து சுகவனநாதர் வரைக்கண் அந்தவுத்தம குணதைதயுடையநாயகி படுக்கைவீட்டைச் சேர்ந்தாள் எ-று. (௬உ)

மத்தியாசமாகச்சற்பதிகைக் கிலக்கியம்.

கலிக்கூற்று.

தூரத்திருந்துபதிவரக்கண்டன்புதூண்டவண்மிச்
சேரத்துணிவளிற்கேகத்துடிப்படிருந்திரண்டு
நேரொத்ததாலசையத்தெரியாதுநிறம்புனைசிங்
காரப்பொற்பாவைநிகர்த்தாள்சுகவனர்கானமின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் புகழாகிய சீதத்தையுடைய வொருநாயகியானவள் தனது கணவன் றூரதேசத்திலிருந்து வரக்கண்டு மனததின அனபானது தூண்டுதலால் அவனையடுத்துத் தழுவுதறகுத் துணிவாள படுக்கைவீட்டிற்செல்லப் பதறுவாள் திருந்திய இவ்விரண்டெண்ணங்களுஞ் சமமாயிருநததால் ஒன்றுஞ் செய்வதறகிடமின்றி அசையவுநதெரியாதவளாய் நிறததைத் தரித்த அலங்காரமான சொர்னப்பாவையை நிகர்ததுநின்றுள எ-று. (௬௩)

பிரபுடாசமாகச்சறபதிகைக்கிலக்கியம்

வினாவிடை.

தனமிசைபொற்புங்கணின்மருளுக்கமுஞ்சாயமிதழ்
துனகையும்பெறநோர்பதிதந்தெனசொல்லதுகே
ளனநடைகிள்ளைமொழியமபுயமதிக்கானமென்மை
யினிமைமணந்தண்சுகவனர்வெற்பிறைபீந்தனனே.

(இ - ள்.) ஓநாயகியே உனதுமுலைகளிற் பொலிவுங் கண்களில் மருண்டபார்வையும் அதரத்திற் சாயமுண்டாகும்படி சிரிப்பும் நீபெறுவதற்கு இப்போது வந்தநாயகன் உனக்கென்னதந்தான் சொல் ஓசகியே அன்னநடக்கு மென்மையும் கிளிவார்த்தைக் கினிமையும் தாமரைமலருக்கு வாசமுஞ்சந்திரனுக்குக்குளிர்ச்சியும் சுகவனநாதர்வரைக்கண் அந்தநாயகன்கொடுததான்.

பரகீயாசமாகச்சற்பதிகைக்கிலக்கியம்.

கலிக்கூற்று.

வருதலைவன்றெருவூடேகத்தன்மனைவாய்க்கதவி
னருகினில்வந்தொருசரித்தங்குளார்சொற்காடாதசொல்லி
வெருவுறநோக்கிவிரகக்கனலினைவேர்வையெனு
மொருகடலாலவித்திட்டாள்சுகவனரூர்வஞ்சியே.

(இ - ள்.) சுகவனநாதர் தலத்தில் ஒருநாயகியானவள் தேச சஞ்சாரத்திலிருந்துவந்தநாயகன் வீதியினூடுபோகத தனது வீட்டுக்கதவின் சமீபத்தில் வந்து அக்கதவை யொஞ்சரித்திருந்து அங்கேயுள்ளவர்கள் வார்த்தைகளுக்கெவ்வளவுஞ் சம்பந்தமில்லாத பிரதியுத்தரங்களைச் சொல்லிக்கொண்டு அந்நாயகனைப் பயந்தீரும்படிபார்த்துத் தான்கொண்ட விரகாக்கினியை வேர்வையாகிய ஒருசமுத்திரத்தினால் அவித்தாள் எ-று. (ருரு)

சாமானியாசமாகச்சற்பதிகைக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

வந்திடுநேயனெதிர்போய்மெய்போற்கண்மழைபொழியத்
தந்திரமாயழைத்துள்ளாக்கிமெத்தைதனிலிருத்திப்
புந்திமகிழும்படிசெய்துமெள்ளப்பொருண்முடிப்பைச்
சிந்திவிடாதுகைக்கொண்டாள்சுகவனர்சேலமின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் சேலமாநகரி லோர்நாயகி தேசசஞ்சாரஞ்செய்துவந்த தலைவனுக்கெதிர்போய் மெய்போலக் கண்களிரண்டும் நீரைமழைபோற பொழிய வுபாயமாய் அவனையழைத்துத் தனவீட்டுக்குட் கொண்டுவந்து மெத்தையின்மேலிருத்தி மனமகிழத் தகுந்தபடிசெய்து மெள்ள அவன்கையிலிருந்த பணமுடிப்பைச் சிதறிவிடாமற பறித்துக்கொண்டாள் எ-று. (ருசு)

## ௧0-வது மலர்முற்றும்.

சகிதூதிகளினிலக்கணமும்

அவர்குணங்களும்.

அருமையொடுமிகநேசித்தகமகிழும்படியேநாயகியின்பக்க
மருவியுறைபவள்சகியாம்வனைதலுபாலம்பனம்பின்வழாதசிட்சை
வெருவில்பரிகாசமவள்குணந்தூதுசெலத்தகுந்தமின்றூதி
பருவவிரகந்தெரியப்படுத்தலுஞ்சேர்க்குதலுமிவள்பண்பாமன்றே.

(இ - ள்.) சகியென்பவள் அருமையுடனே நிரம்பவும் விசுவாசித்து நாயகி மனமகிழும்படி யவளது பக்கத்தே பொருந்தியிருப்பவளாம், அலங்கரித்தலும், உபாலம்பனமும் (பின்புவழுவாத) சிக்ஷையும் (பயமில்லாத) பரிகாசமும் அவட்குரிய குணங்களாம். தூதியென்பவள் தூதுசெல்வதற்குத் தகுந்தவளேயாம், பருவமான விரகத்தையறியப்படுத்துதலும், சேர்க்குதலும், இவட்குரிய குணங்களாம் எ-று. (ருஎ)

அலங்கரித்தலுக் கிலக்கியம்.

கவிக்கூற்று.

வகைவகைகோலமுலைக்கிடும்போதுமணாளன்விரற்
றகையுயிர்பாய்வனபோலவன்கையைசசகியெழுத
நகைகொட்டதட்டிச்சுகவனர்வெற்பினன்னங்கைகண்ணின்
முகைவிரிமாலிகையாலடித்தாளொருமோகினியே.

(இ - ள்.) சகியானவள் தனது முலைகளின்மேல் வகைவகையாகக் கோலஞ்செய்யுஞ் சமயத்திலே நாயகனது அழகிய விரலகளினகங்கள் பாயும்பாவனைபோலிருக்கும்படி யவனதுகையை யம்முலைகளின்மேல்எழுத அதுகண்டு ஒருநாயகியானவள புன்சிரிபபோடு அதட்டிகசொண்டு சுகவனநாதர்வரைக்கண அந்தசசகியினது கணகளில் அரும்பலாந்த பூமாலிகையினால அடித்தாள் எ-று. (சுஅ)

உபாலம்பனத்துக் கிலக்கியம்.

தலைவியைச் சகிவினவுதல்.

பருவமழையினுலகந்தழைக்கும்படிவருங்கார்
பொருவவுனதுளம்பூரிக்கச்செயயும்புமானிடததிற்
கருணையிலாதிருக்கின்றனையந்தரங்கரணமென்னே
வருணகுடிலசுகவனநாதர்வரையணங்கே.

(இ - ள்.) நீரைததரித்த சடாமகுடத்தையுடைய சுகவனநாதர் வரைக்கண் வசிக்குமட நாயகியே பருவததே தானபொழிகின்ற மழையினால் உலகங்களெல்லாந் தழைத்தோங்கும்படிவருகினற மேகத்தைபபோலுனது சரீரமுழுதும் பூரிக்கச்செயயும் அந்தநாயகனிடததுக் கொஞ்சமாயினும் நீதயவில்லாதிருக்கினறாய் உன் அந்தரங்க நினைவுயாதோ தெரியச்சொல் எ-று. (சுகூ)

சிட்டைக் கிலக்கியம.

தலைவிக்குச் சகிசொலலியது.

சுகமணவாளனைத்தேடிபபொழிற்புதர்துன்னுவையேற்
பகலளிகோடிபண்பாடிசசுழலும்படரிரவிற்
றிக்குமநேகசகோரத்திரளிவைதேர்ந்துசெல்வாய்
மகபதிபோற்றுஞ்சுகவனநாதர்வரைமயிலே.

(இ - ள்.) தேவேந்திரன்வந்து பணிகின்ற சுகவனநாதா வரைக்கண் மயில்போலு நாயகியே இன்பத்தைத்தருகின்ற வுனதுநாயகனை நீதேடிக்கொண்டு அந்தச்சோலையிலிருக்கும் புதர்வீட்டிற்குப்போகத் துணிவாயாகிற் பகற்காலமெல்லாங் கோடானுகோடி வண்டினங்கள் கீதங்களைப்பாடிக்கொண்டெங்குஞ் சுழன்றுதிரியும் பரந்தவிராக்காலத்தோவெனின் அநேக சகோரப்புட்களின்

கூட்டங்கள் பிரகாசித்தலாவும் ஆதலாலிவைகளையோசித்து ஆங்கே செல்லக் கடவாய் எ-று. (எ0)

சகிகளநாயகியைப்பரிகாசித்தலுக் கிலக்கியம்.

கலிக்கூறறு.

பலவுமெழுதியுளசித்திரப்பொற்படத்தொருபாற்
குலவுசுகவனநாதருருவுக்குறித்தமைத்து
மெலவிவாயாரொன்றிகுளையர்கேட்கமுன்வெள்கிநகைத
தலர்விழியால்விடைதந்தாண்மகிழ்ந்துசொர்ணும்பிகையே.

(இ - ள்.) தனதுசகிமார்கள் பலவடிவங்களையும் தனித்தனி எழுதியிருக்கின்றவழகிய சித்திரபபடத்தினமேல ஒருபக்கத்தில் விளங்காநின்ற சுகவனநாதரது திருவுருவததையும் எழுதிவைத்துககொணடுபைய அயமா இவரயார சொலவாயெனறு கேட்டமாததிரததிற சொர்ணும்பிகையானவள் முனனமே யப்போசொலல வெட்கமுறறவளாயப புன்சிரிபபுடனே தாமரைமலாபோன்ற கணகளால் அவாகளுககு மகிழநதுவிடைகொடுத்தாள் எ-று. (எக)

நாயகிநாயகனைப்பரிகாசித்தலுககிலக்கியம்.

கலிககூறறு.

குதாடலிற்றன்பணிகோன்மறைககசசுகவனநன்
ஞதாவெடுத்தருள்சத்தியநநுக்குநாணுவையோ
நீதானனலவிழிகொண்டாயவெம்பாமபொடுநீர்தரிந்தா
யாதாரமேயவையென்றுள்சிரிந்துசசொர்ணும்பிகையே.

(இ - ள்.) சுகவனநாதருஞ் சொர்ணும்பிகையுஞ் சொக்கட்டான்விளையாடுமிடத்தே தேவியினது ஆபரணத்தை அககடவுளெடுதது மறைத்துககொள்ள அச்சொர்ணும்பிகை அவரைநோககிப் புனசிரிப்புடனே சுகவனநாதரோ யென்னிடத்திருநது எடுததுக்கொண்ட வாபரணத்தைக்கொடும ஏன ...லையென்றுசாதிககினறீர் நீர்சததியம்பண்ணவும் நாணுவீரோமாட்டீர் ஏனென்றல் அக்கினியைக் கணணில் வைத்துக்கொண்டீர் பாம்பையுமநீரையுந தரித்திருக்கின்றீர அவைகளுமக்காதாரமே யினியெதற்குப் பயப்படுவீரெனருள் எ-று. ()

விரகந் தெரிவித்தலுக் கிலககியம்.

நாயகனுக்குத்தூதிசொல்லியது.

பங்கயனெங்குமிலங்கவருந்திப்படைத்தகுல
நங்கையெனும்பெருந்தீபங்கடைத்திசைநண்ணியதாற்
சங்கைதவிர்ந்தெழில்பொங்கநின்னேயதயிலநிறை
வெங்கயதுங்கனிறைஞ்சுஞ்சுகவனர்வெற்பரசே.

(இ - ள்.) வெவ்விய அயிராவதமென்னும் யானையினையுடைய வுயர்ந்த தேவேந்திரன் வணங்குஞ் சுகவனநாதர் வரைக்கண் வசிக்கின்ற நாயகனே யெங்குங் காந்தி பிரகாசிக்கும்படி பிரமதேவனால் மிகவும் வருந்திச் சிருட்டிக்கப்பட்டிருக்கின்ற வெங்கள் குலநாயகியாகிய பெரியதீபமானது இப்போது முடிவானதிசையை யடுத்துள்ளதால் அத்தீபமானது சந்தேகமின்றுமபெற்று அழகாலதிகரிக்கும்படி யுனது சிநேகமென்னுந் தயிலத்தை நிறையச்செய்வாய் எ-று. (எ௩)

சேர்த்தலுக்கிலக்கியம்.

நாயகனுக்குத்தூதிசொல்லியது.

சரசந்தெரிபவர்மெச்சுமிராவந்ததுசுரும்பின்
றிரளென்றிடவிருளெங்கும்வளைந்ததுதேர்ந்திளைஞர்
விரகங்கொளக்கணைவிற்பூட்டினான்மதவேள்விரைந்து
பரவுஞ்சுகவனர்வெற்பபோய்செய்வாய்செய்பவைகளையே.

(இ - ள்.) எல்லாவுலகமுந் துதிக்கின்ற சுகவனநாதர் வரைக்கண் உள்ள நாயகனே சரசவினோதங்களின அருமைபலவுந் தெரிந்தோர்களால் மெச்சப்பட்ட விராக்காலமிதோ வந்தது வண்டினகூட்டங்க ளெங்கும வியாபிததென்று நினைக்கும்படி யிருளும் வளைந்துகொண்டது இவைகளையறிந்து மனமதனனவன் இளமையையுடைய தலைவி தலைவர்கள் யாவரும விரகத்தையடையத் தனது கருபபுவில்லிற புட்பபாணங்களைப் பூட்டினன ஆதலால் நீவிரைந்து செய்யத்தக்கவைகளை யிப்போது செய்வாய் எ-று. (எ௪)

கக-வது மலர் முற்றும்.

இத்தனைமலர்களாலிக்குச்சம்

முடிவுபெறறதெனல.

எட்டுவிதநாயகிகளிலக்கணமும் பின்னிருவகையியல்பும்பத்து
மட்டுவிரிமலராகமற்றமைந்தபலவுமொருமலரோயாகக்
கட்டுளவப்பதினொருபூக்களிலிரண்டாங் குச்சமதைக்கவினச்செய்தா
மெட்டுவரிப்புவிமதிக்கநிறைமூன்றாங்குச்சமினிநிகழ்த்துவோமால்.

(இ - ள்.) எட்டுவகையாக வழங்கிய நாயகிகளி னிலக்கணமும், பினனிருவகையாக வழங்கிய நாயகிகளினிலக்கணமும, ஆகியவிபபத்தும் வாசனைவிரியப்பெற்ற பத்துமலர்களாக அப்பாற்சொல்லிய பலவிலக்கணமும் ஒருமலராகத்தொடர்ச்சியுள்ள அப்பதினொருமலர்களால் இரண்டாவது குச்சததை யழகுபொருந்த வலங்கரித்தோம், இனி நெடியகடல்சூழ்ந்த பூவுலகமதிக்கும்படி நிறைந்த மூன்றாங்குச்சத்தைப் பிரகாசிக்கச்செய்வோம் எ-று. (எ௫)

இரண்டாவது குச்சம் முற்றும்.

ஆ செய்யுள் கஅ௨.

(இ - ள்.) சுகவனநாதன் றனது நாயகிமேல்வைத்த பிரியத்தினால் தான அணிந்துள்ளவைகளை நோக்கி ஒசந்திரனே யிரசச்சொரூபமிசையினது திரு மேனி யதிகவெனிரசால்த்திறம் வாராத்தமல் மங்குமம ழ நீ அமிர்தகிரணங் களைவீசு, ஓவாசுகியே யுனது மாணிக்கத்தையுடைய படத்தினாலே மறைப்பாய் புதிதாகிய நிழலை நீயுண்டாக்கு, ஆகாசமே நீ தாரகைகளையே நீ தொடு கட் டளையிட்டருளுவன எ-று. (௩)

அநுகூலதக்ஷிண நாயகலக்ஷண

இலக்கணம்.

கலசமதர்விழிப்பரமங்கையர் கடமைச்சொப்பனத்துங் கருதா தென்றுங், குலமனைவிமீதிலன்புகூர்ந்திருக்குங் காந்தனனுகூலனாகு ம், பலதருணநாயகிகள் பாலுமொன்றுபோலப்பிரியம் படைத்துநிற போர், னுலகுபுகழ்தட்சிணனென்றுரைப்பர்மற்றோரியல்பும்மெடுத்து ணர்த்துவாமே.

(இ - ள்.) அநுகூலனென்பவன (கலசங்களையிணைத்த மதர்த்ததனங்களையு டைய) அன்னியமாதர்களைக் கனவிலும் எண்ணாதவனாகி யெப்போதுந் தன து குலநாயகியின்மீது அன்புமிகுந்திருக்குநாயகனேயாம்; (பூமியிற்புகழப் பட்ட) தக்ஷிணனென்பவன இளமையையுடைய பலநாயகிகளிடத்திலும் ஒரேதன்மையாகப் பிரியம்வைத்து நிற்குநாயகனேயாமென்று சொல்வார் முன் னோர், ஏனைநாயகர்களிலக்கணங்களையும் எடுத்தறிவிப்போம் எ-று (௪)

அநுகூலநாயகனுக் கிலக்கியம்.

தலைவன சொல்லியது.

தரையேமிருதுவடைவாயுனவேகண்சரியினொளிர்
விரைபாதையேகுன்றுதிதென்றலேயுடலவேர்வைதணி
யுரைசோலையேயணிதநாவாயசுகவனநாமுலைமால
வரைநாயகியெழுந்தாண்மலர்கொய்துவருவதற்கே.

(இ - ள்.) சுகவனநாதர் தலத்தில் முலைகளாகிய பெரியமலைகளையுடைய வென்நாயகி மலர்கொய்து வருவதற்காக இதோபுறப்பட்டனள், ஆகலால் பூமி யே நீ மிருதுத்தன்மையைப்பொருந்தியிரு, சூரியனே நீ குளிர்ந்த சந்திரனைப் போற்பிரகாசிவிளங்கு நடப்பதற்கு இடமாகியவழியே நீசுருங்கு, தென்ற லே யிவள்உடலில் உண்டாகும வேர்வையை நீதணி, உயர்ந்தசோலையே நீ சமீ பித்துவிடு எ-று. (௫)

மாணிக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

உனதுளமோவசிரஞ்சொற்களோவமுதொக்குமெனச்
சொனவுடனேநின்றிடாதயல்போய்ப்பின்னுந்துன்னிமுக
வனமலாகோட்டிச்சுகவனாவெற்பவன்வைகலுந்தன்
கனவிசனந்தெரிவித்தெனப்பார்த்தனள்காரிகையே.

(இ - ள்.) நாயகி நாயகனைநோக்கி உன்னுடைய மனமோவசிரத்தைப் பார்க்கினுங் கடினமுடையது, வார்த்தைகளோ அமிர்தத்தை யொத்திருக்கின்றனவென்று சொன்னவுடனே அவ்விடத்தினின்று நில்லாதவளாய் வெளியே போய்ப் பின்னும்வந்து தனது முகமாகிய அழகிய தாமரைமலரை வளைத்துக் கொண்டு சுகவனநாதர் வரைக்கண் அந்தநாயகனிருந்த மார்க்கத்தில் அந்நாயகியானவள் தனது கனத்தவிசனத்தை யறிவிக்கும்பாவனையாக அவனைப்பார்த்தனள் எ-று. (கக)

வார்த்தையால்வியங்கியத்திற்கிலக்கியம்.

தலைவன்றலைவியைவினவுதல்.

நமனுநடுங்குநடுநிசிப்பூட்டங்கைக்கணையிற்
கமழ்தருசோலைசெல்கின்றாயுனதுகருத்தெனசொல்
லமலசுகவனாவெற்பினுனக்கயலானலன்றேன்
சமர்விழியாயென்னினுந்துணையாருந்தனிவழிக்கே

(இ - ள்.) யுத்தத்தைச்செய்யுங் கணைகளையுடையவளே யமனும்பயந்து நடுங்கத்தக்க இருக்கநடுவிராவிலே யந்த ஆறலைகள்ளரிருக்கும் வாசனைவீசுகின்ற சோலைக்குப்போகின்றாயே யுன்கெண்ணமென்ன சுவர்ணகிரிநாதரான சுகவனநாதர் மலைச்சாரலி லுனக்கு நானன்னியனல்லேனே நீ தனியாகச்செல்லும் அவ்வழிக்கு எனைப்பார்க்கினுந் துணையாரிருக்கின்றார்கள் உண்மையைச் சொல்லு எ-று. (கஉ)

தொழிலால்வியங்கியத்திற்கிலக்கியம்.

கவிக்கூற்று.

ஓயிலாகவேயெலுமிச்சம்பழத்தைக்கைக்குள்ளமைத்துப்
பயிலாலுயர்ந்தபதிவிந்தைகாட்டிடப்பார்த்துமணி
வெயிலார்மனையிலேசித்திரசூரியவிம்பமிசை
மயிலோர்கத்தூரிப்பொட்டிட்டாள்சுகவனர்மாகிலத்தே.

(இ - ள்.) சுகவனநாதர் பெருமைதங்கிய நாட்டின்கண்ணே சைகைவல்லமைபாலுயர்ந்த வொருநாயகன் உல்லாசமாக வோரெலுமிச்சம்பழத்தைத் தனது கையில்வைத்துக்கொண்டு தெருவிடல் கச்சக்கல்முதலிய சிலவேடிக்கைகளைக்காட்ட வதுகண்டு மயில்போன்ற நாயகியானவள் ரத்தினங்களின் பரவைநிறைந்த தனது வீட்டினிலே மேற்சித்திரித்திருந்த சூரியவிம்பத்தி லொருகஸ்தூரிப்பொட்டை இட்டனள் எ-று. (௧௫)

க - வது மலர் முற்றும்.

உபபதிவைசிகநாயகர்களின்

இலக்கணம்.

வரம்புகெடமறைந்தொழுகவல்லவனே யுபபதியாம்வகுத்துப்போந்த
வுரையகொளனுகூலாதிபேதமிவனுக்குமடுத்துளவேனும்
தரம்பரவுசடத்துவமேமுக்கியமாம்பரத்தையாதரஞ்சரசபோக
நிரம்பவிழைகின்றசுகிதாவேவைசிகனெனலாநினைகுங்காலே.

(இ - ள்.) உபபதியென்பவன் ஆசாரமுதலியவரம்பு கெடும்படி வஞ்சனையாகமறைந்து நடப்பதில் வல்லமையுடைய நாயகனேயாம். இவனுக்கு முன்னே சொல்லிவந்த (வுறுத்தியைக்கொண்ட) அனுகூலாதி பேதங்கள் பொருந்தியுள்ளவாயினும் (வலிமைமிகுந்த, சடத்துவமே முக்கியமாயிருக்கும், இனியோசிக்குங்காலையில் வைசிகனென்பவன் வேசியருடைய சரசகிரீடையின்பத்தையேமிரம்பவும் விரும்புகின்ற சுகியாகிய நாயகனென்று சொல்லலாம் எ-று.()

உபபதிக் கிலக்கியம்.

தலைவிசொல்லியது.

அதிபயத்தாலிமையாதுற்றுப்பார்க்கவொண்ணாதுவளை
யிதிரொலிப்பாமென்பதாலேமுயங்கற்கிடமில்லைத
ததியிதழ்ப்பற்குறிபுட்குரலகாணத்தகாதெனிலிப
பதியுடம்பேயொருதோய்வோசுகவனர்பட்டினத்தே.

(இ - ள்.) சுகவனநாதர் பட்டினத்தில் நாமிந்தநாயகனை யிமையாதுற்றுப்பார்க்கலாமெனில் அதிகபயத்தினால் அதற்குக்கூடாது, கைவளைகள் இச்செய்கையிற் சத்திக்குமென்பதால் ஆலிங்கனஞ்செய்வதற்கு மிடமில்லை, கிரீடாசமயத்தில் இதழிற் பற்குறியுங் கண்டத்திற் புள்ளொலியும் காணத்தகாதல்லவா ஆதலாலிவனது சரீரத்திற்சேர்வது ஒருசோகமேயோ எ-று. (௪௫)

உ - வது மலர் முற்றும்.

வைசிகனுக் கிலக்கியம்.

தலைவனைபாங்கனோடு சொல்லியது.

தண்டைபுலம்பவளைபம்பக்கும்பதனந்ததும்பக்
கொண்டைகுலுங்ககுயிலிசைகாட்டிகருலாவுமிவ
ளண்டையிணையருவதேயினபமபொன்செலவாயினுமென
பண்டைநஞ்சுண்டசுகவனநாதர்பதிநண்பனே.

(இ - ள்.) முன்னாளி லாலகாலத்தையுண்டருளிய சுகவனநாதர் தலத்தி லிருக்கும் நண்பனே பாததண்டைகள் புலம்பவும் கைவளைகள் சத்திக்கவும் பூரணகும்பங்களையொத்த தனங்கள் பூரித்துததும்பவுங் கொண்டைகுலுங் கவுங் குயிலைபோலு மினியகீதத்தைக் காட்டிக்கொண்டு பிரகாசிக்கு மித்தநாயகியினதுஇடத்திற் சேர்வதேயின்பம் உசசுறை பலதிரவியஞ் செலவானாலு மென்ன எ-று. (௪௬)

வைசிகநாயகபேதமும்

உத்தமவைசிகனிலக்கணமும்.

அத்தகு வைசிகனுத்தமாதிகுணத்தாலவகைமூன றாகத்தோன் று, மூத்தநகைநாயகிமற்றெந்தனைகோபங்கொளினு முகங்கோணுமன், மெத்தவுபசாரமவட்கொத்தபடியடுத்தடுத்து விரும்பிச செய்வோ, னு த்தமவைசிகனுமென் றுணர்ந்துவர் முன்னூலகளினுலுயர்ந்துளோரே.

(இ - ள்.) அந்தததகுதியையுடைய வைசிகன உததமாதிகுணங்களால், உத்தமவைசிகன, மததிமவைசிகன, அதமவைசிகனென மூன்றுவிதபேதங்க ளையுடையவனுகத தோனறுவன். உத்தமவைசிகனெனபவன முததை நிசர்த த பருவத்தையுடைய நாயகியானவள் எவ்வளவு கோபங்கொண்டாலுந தான் மு கங்கோணுதவனுகி மிகவு முபசாரங்களை யவளுக்கேறறபடியடுததடுததுப் பிரி யமுற்றுசசெயயு நாயகனேயாமெனறு சானறோாகள முனனூல்களிலுலறிவி பபாாகள. (௪௭)

உத்தமவைசிகனுக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

விரிகோபத்தாற்பொதுமான்கண்சிவந்தவிதந்தெரிந்துந்
தெரியானெனத்தேபுறம்பாராதுமுன்சொற்சிரிப்பசற்றிப்
பரிவாமெத்தைக்குட்குனிந்துற்றலைமடிப்பான்பதிபின்
சரியாசத்தாமந்தொடுப்பான்சுகவனர்சார்பிடத்தே.

(இ - ள்.) சுகவணநாதா நகரினிடத்தொரு நாயகனானவன் வேசையிற
டையகண்கள் விரிநதகோபததினாற சிவப்பேறியவிதத்தைத் தெரிந்தாநதெரி
யாதவனைப்போனறு புறம்பாராதவனாகி தான் முநதிப்பேசும் வார்ததையுஞ
சிரிப்புமவிட்டுப் பிரியமாக மெததையிற றலைகுனிநதிருநதுகொணடு தாமபூல
த்தைமடிப்பன பினறும புட்பஹாரங்களைக கிரமமாகததொடுப்பன் எ-று. ()

மததிமவைசிகனிலக்கணம்.

கருவபரிமளகளபகனதனநாயகிவெகுண்டகாலந்தன்னி
லருகிலுளதன்சினமுமன்புந்தோன்றுதடக்கியவடன்பண்பாற்
பருவமனநிலையறியலாமெனசசும்மாவிருககும்பதியேயின்ப
மருவுமதிலிதசரசமததிமவைசிகனென்றுவகுககலாமே.

(இ - ள்.) இனபம்பொருநதிய அதிக சரசவிதத்தையுடைய மததிமவைசி
கனெனபவன மதங்கொணட வாசனைமிகுநத களபஙகளையணிநது கனத்தமு
லைகளையுடைய நாயகியானவள கோபிததகாலததிற பக்கததிலுள்ள தனது
கோபததையும் பிரியததையும் வெளியிறகாட்டாம லடககிக்கொண்டு அநத
நாயகியினது குணஙகளாலே பருவமானநிலையை யறியவேண்டுமெனறு சும்
மாவிருக்கும் நாயகனேயாமெனறு சொலலலாம் எ-று. (கக)

மததிமவைசிகனுக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

சரசமகநறவிழிசிவப்பேறிததலைவிதனத்
திரவெழுதத்தகுங்கோலம்பலவுமிட்டோபுனைந்து
வரவிடனமெச்சியறிவோமிவடன்மனதெனப்பூ
ணுரகசுகவனாநாட்டவளவீட்டின்முன்னுற்றனனே.

(இ - ள்.) நாயகியானவள சரசவினோதங்களையெல்லாம்விட்டுத தனது
கண்களிற் சிவப்பையுண்டாக்கி முலைகளி லிராக்காலததெழுததககுநத பல
வித கோலங்களையும் அப்போதேயெழுதி யழகாகவலங்கரிததுக்கொண்டிருக்க
வதுகண்ட காமியாகிய நாயகன் அவளைமெச்சி யிவளமனத்தை யின்னமறி
வோமென்று சர்ப்பாபரணத்தைத்தரிதத சுகவணநாதா நாட்டினகண அவள்
வீட்டுமுன் வாசலிலே பொருநதினன் எ-று. (உ0)

௩ - வது குச்சம்.

அதமவைசிகனிலக்கணம்.

கருணைபயம்வெருளிவெட்கமிவைமுழுதுந்தான்விடுத்துக்கனிவுகூர
முருகுவிரிமலரளகமுகிழ்முறுவற்களபவிளமுலைநல்லாரை
மருவுபொழுதிதுசெயலாமிதுசெயலாகாதெனுமம்மனவிசார
மொருசிறிதுமின்றியிருப்பவனதமவைசிகனென்றுரைக்கலாமே.

(இ-ள்.) அதம வைசிகனென்பவன், கிருபை, பயம், கோபம், வெட்கம் முதலியகுணங்களை யெல்லாம் விட்டவனாகி யாவரு மகிழ்ச்சிகூரும்படி வாசனைவிரிந்த மலர்களை தரித்த கூந்தலையும் முல்லையரும்பை யொத்த பற்களையும் இளமையாகிய முலைகளையுமுடைய பெண்களைக் கூடும் சமயத்தில் இன்னது செய்யலாம் இன்னது செய்யலாகாதென்கிற அந்த மனவிசார மோரற்பமுமில்லாமலிருக்கும் நாயகனும் என்றுசொல்லலாம் எ-று. (௨௧)

அதமவைசிகனுக்கிலக்கியம்.

தலைவிசொல்லியது.

நீதிகருணைவெட்கங்கோபநம்பிக்கைநீங்கியிருந்த
மேதினிவேசையர்மென்மையுடம்பைமிகவருத்தும்
வாதினனுமிவனென்னதந்தாலுமனஞ்சகியேன்
போதினனேத்துஞ்சுகவனநாதர்பொருப்பிடத்தே.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கின்ற பிரமதேவன் துதிக்குஞ் சுகவனநாதர் மலைச்சார்பிலிருந்த நாயகனானவன், நீதியுங் கருணையும், வெட்கமும், கோபமும், நம்பிக்கையுமில்லாதவனாகி யிவ்வுலகிலுள்ள வேசையர்களின் மிருதுவான சரீரத்தை மிகவும் வருந்தச்செய்கின்ற வாதுடையவனுமிவன் என்ன கொடுத்தபோதிலுஞ் சேர்வதற்கு நான் மனஞ் சகியேன் எ-று. (௨௨)

௩ - வது மலர் முற்றும்.

புரோடிதநாயக னிலக்கணம்.

வேறு.

தணந்துபோய்த்தேயசஞ்சாரத்துற்றுழி
யிணங்குநாயகிதனையெண்ணியெண்ணியங்
குணங்கியேமிகவுநெஞ்சுருகுகின்றவ
னணங்குகூர்புரோடிதநாமமென்பவே.

(இ-ள்.) ஆசைமிகுந்த புரோடிதனென்பவன் பிரிந்து சென்று அன்னிய தேயசஞ்சாரத்திலிருக்கும்போது தனக்கிணங்கிய நாயகியை யங்கே நினைத்து நினைத்து வாடி மனது உருகும் நாயகனே யாமென்று சொல்வருயர்ந்தோர் எ-று. (௨௩)

புரோடிதநாயகபேதங்கள்.

*புரோடிதபேதமூன்றும்புகன்றிடிற்
புரோடிதபதியெனப்புன்னெறிசெலும்
புரோடிதவுபபதியெனப்பொலம்புனை
புரோடிதவைசிகனெனப்பொருந்துமே.

(இ - ள்.) மேற்கூறிய புரோடிதநாயகபேதங்கள் மூன்றாகும், அவைக ளைச்சொல்லுமிடத்துப் புரோடிதபதியென்றும் (அற்பமார்க்கத்திற் செல்லு கின்ற) புரோடிதவுபபதியென்றும், அழகைத்தரித்த புரோடித வைசிகனென் றும் பொருந்தும் எ-று. (உச)

புரோடிதபதிக்கிலக்கியம்.

தலைவன்சொல்லியது.

கடிதடவாவிமுலைமீனீர்பொறகவான்கதலி
படிகுழன்மாலைமுகமதிசொற்சுதைபார்வைமலர்
வடிவிடைதோன்றவளர்பூங்கொடியைமகிழ்ந்தணையா
விடினகலாதுசுகவனநாடடென்விரகவெப்பே.

(இ - ள்.) அல்குலென்னுந் தடாகமும், முலைகளென்னு மீனீரும், அழ கிய தொடைகளென்னும் வாழையும், பொருந்திய கூந்தலென்னும் இரவும், முகமென்னுஞ்சந்திரனும், சொற்களென்னுமமுதமும், கண்களென்னுந் தாம ரைமலரும், தனது வடிவினிடத்தே பிரகாசிக்கும்படி வளர்கின்ற பூங்கொடி யாகிய அந்நாயகியை மனமகிழ்ந்து நானிப்போது சேராவிடிற் சுகவன நாதர் நாட்டின்கண் எனது விரகாக்கினியின் வெப்பந்தணிய மாட்டாது எ-று. (உரு)

புரோடிதவுபபதிக்கிலக்கியம்.

தலைவன்சொல்லியது.

புனலாடச்செல்லும்பொழுதிற்றொடர்ந்துபின்போனவென்னை
முனநேயத்தோடுடல்பூரித்துபபார்த்துமுறுவலித்துத்
தனதாகத்தொண்டுகொண்டாண்டாளையிண்டுத்தழுவவினை
மனதாவற்கென்னினிச்செய்வேன்சுகவனர்மாநிலத்தே.

(இ - ள்.) சுகவனநாதர் பெருமைதங்கிய நாட்டின்கண் முன்னொருநாள் நீராடுதற்குச் செல்லும்போது தொடர்ந்து பின்னேபோகிய வென் முகத தை பிரியத்துடனே மேனிபூரித்துப்பார்த்துச் சிரித்துச் சொந்தமாக வென் னை யடிமைகொண்டாண்ட அந்தநாயகியை யிவ்விடத்தே தழுவ வேண்டு மென்று விரைகின்ற எனது மனவாசைக்கினி யென்னசெய்வேன் எ-று.

புரோடிதவைசிானுக்கிலக்கியம்.

தலைவன்சொல்லியது.

மெலநடைதோன்றவெவ்ண்மெட்டிகலீரொனமேனிமின்னப
பலநிதிமான்கள்கடபாாவைவெலேககடபடத்தெருவூ
டுலவுமவவேசைதனைநான்பிரிநதிடவும்படைக்க
மலரயனுக்கென்னசெயதேன்சுகவனாமாநலத்தே.

(இ - ள்.) சுகவனநாதா் பெருமை தங்கிய தலத்தின்கண் மெல்லிய நடை தோன்றவும், வெள்ளிய மெட்டிகள சலீரென்று சத்திக்கவும், மேனி மின்னற் கொடிபோற் பிரகாசிக்கவும், பலநிதிமான்களுந் தனதுகண்களின் பார்வை யாகிய வலைக்குட்படவுந், தெருவினூடே வுலாவிய அந்தவேசையை நான் பிரியும்படியாகவும் என்னைச் சிருட்டிக்கத் தாமரைமலரி லிருக்கும் பிரமதேவனுக்கு முன்னே யென்ன தப்பிதஞ் செய்தேன எ - று. (உ௭)

அபிஞன்நாயகாபாசன்என்னும்

இவர்களியிலக்கணம.

ஆசறுமபிஞனுமன்றிநாயகா
பாசனுமெனவிருபதிகளாகற்றுணா
தேசினனபிஞனுநதெளிவிலாதவ
னேரியநாயகாபாசனென்பவே.

(இ - ள.) (குற்றமற்ற) அபிஞனென்றும் அல்லாமலும் நாயகாபாசனென்றும் இருவித நாயகாகளுண்டு; அவர்களில் அபிஞனென்பவன் பலவுங் கறறறிந்த புத்திப்ரகாசத்தையுடைய நாயகனும்; (இகழ்ந்த) நாயகா பாசனென்பவன அங்ஙனமறிவில்லாத நாயகனுமெனறு சொல்வ ருயர்ந்தோர் எ - று. (உஅ)

அபிஞனுக்கிலக்கியம்.

தலைவி சகியொடுசொல்லியது,

எனதுளத்தூடிருக்கின்றவனென்பதறகேறகநினை
வனவனைத்துந்தெரிந்தவ்வவ்வகைமன்மதனுமெச்சத்
தினநடத்துநதொழிலாற்சகியேயிசசிநேகபதி
தனதுபுத்திக்கிணையுண்டோசுகவனர்சார்பிடத்தே.

(இ - ள்.) சுகவனநாதர் நகரினிடத் தெனது மனத்திற் குடிகொண்டிருப்பவனென்பதற்கு இணங்க நானினைக்கின்றவைகளை யெல்லாம் உடனுடனறிந்துகொண்டு அந்தந்தப்படிக்கே மன்மதனும் பார்த்து மெச்ச நிதமும் பலவித கலவித்தொழில்களை நடத்துவதால் இந்தப் பிரியமுள்ள நாயகனது புத்தி வல்லமைக்கு வேறே யொப்புண்டோ வில்லை எ-று. (உ௯)

நாயகாபாசனுக்கிலக்கியம்.

தலைவிசகியொடுசொல்லியது.

ஆரும்புகாமலர்க்கான்றனிச்சென்றருகாயவற்குக்
கோருங்குறிப்பைக்கண்ணாற்காட்டிப பாகிலேகொள்வதுபோ
னேருந்தனந்தெரியத்துகினீத்துமென்னெஞ்சறியான்
றேரும்படிக்கென்னசெய்வேன்சுகவனாசேலமின்னே

* (இ - ள்.) சுகவனநாதர் சேலமாநகரி லிருக்கின்ற சகியே, நான் ஒருவரும் புகக்கூடாத பூஞ்சோலையிற் றனியே சென்றிருந்த நாயகனுக்கருகே நின்றுகொண்டெனது கோரிக்கைக் குறிப்பைக் கண்களாற் காட்டியுந் தாம்பூலங்கேட்பதுபோற் பொலிவுள்ள தனங்கள் தெரியும்படி சேலையை நீக்கியும் என்மனக்கருத்தை யிவனறிகிலான் இனி யிவனறிந்து கொள்ளுவதற் கென்னசெய்வேன் எ - று. (௬0)

பரிகாசகநாயகனிலக்கணம்.

உளன்பரிகாசகனென்னவோர்பதி
களங்கறுவெவ்விலக்கணனன்றெனி
னிளங்கொடியனையவரிதயமவெள்குற
வளங்கெழுபகடிசெய்வகையிலவல்லனே.

(இ - ள்.) பரிகாசக னென்றோர் நாயகனுண்டு; அவன் குற்றமற்ற எவ்வித விலக்கணத்தையுடையவனோ வென்னில் இளமையான பூங்கொடிபோன்ற பெண்கள் மன நாணும்படி வளமை பொருந்திய கேலிகளைச் செய்யும் வகையில் வல்லமையிருந்தவனே யாம் எ-று. (௬௧)

பரிகாசகனுக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

விழியிற்சகிதனையேவுகின்றியன்றிமென்மதுர
மொழியுத்தரவிலையென்னசசுகவனர்மூரலகொள
வழிபொற்கதிர்மதிமாமுகங்கோட்டினள்வாணைகைதோ
யெழிலிற்பொலிகொவ்வைசசெவ்வாய்ச்சொர்ணும்பிகையென்னுளே.

(இ - ள்.) சுகவனநாதர் தமது தேவியைநோக்கி ஒபெண்ணே நீ கண்களாற் சகியை யேவுகின்றயல்லது மெல்லிய மதுரமானவார்த்தையா லுத்தரவில்லையென்றுசொல்லிப் புன்சிரிபபுக்கொள்ள வொளிபொருந்திய பற்குறிதோய்ந்த அழகாற் பிரகாசிக்குங் கொவ்வைப்பழத்தையொத்த சிவந்த வாயினையுடைய சொர்ணும்பிகையென்னும் நாயகியானவள் பொலிந்து வழிகின்ற கிரணங்கணிறைந்த சந்திரனைப்போற் பெருமைதங்கிய முகத்தை வளைத்துக் கொண்டாள் எ - று. (௬௨)

திவ்வியாதிநாயகபேதம்.

திவ்வியவியன்முதற்றிற்மும்பேதமு
மவ்வினநாயகிகட்கடுத்தபோ
லிவ்விதநாயகர்க்கடுக்குமென்
றெவ்வியவடநூலியுணர்த்துமென்பவே.

(இ-ள்.) திவ்வியத்தன்மைமுதலாகப்பிரகாசிக்கின்ற மூன்றுபேதங்களும் அங்கேசொல்லிய நாயகிகள் கூபத்திற் கடுத்திருப்பதுபோலவே யிந்தவித நாயகர்களுக்கும் ஏற்குமென்று பொருந்திய வடநூலறிவிக்குமென்ப ருயர்ந்தோர் எ - று.

எனவே திவ்வியை அதிவ்வியை திவ்வியாதிவ்வியையென்று நாயகிகளைச் சொன்னதுபோலவே நாயகர்களையுந் திவ்வியன் அதிவ்வியன் திவ்வியாதிவ்வியன்என்று சொல்லத்தகுமென்றுயிற்று. (௬௬)

திவ்வியநாயகனுக்கிலக்கியம்.

தலைவிசொல்லியது.

திங்கள்புயங்கமிரண்டுமிணங்கச்சிரத்தமைத்து
வெங்கனலேந்திப்புலியுரித்தாலமிடற்றடக்கி
யங்கசனைச்செயித்தோராஞ்சுகவனராமொருவர்
துங்கவிடைப்பொலிந்தாற்றென்னெஞ்சுந்தொடர்ந்ததுவே.

(இ - ள்.) மன்மதனைச் செயித்தவராஞ்சுகவனநாதராம் ஒருவர் தம்மிற் பகையின்றி யுறவாயிணங்கும்படி சந்திரனையும் பாம்பையுந் தமது சிரசிலமைத்து வெவ்வியநெருப்பைக் கையிலேந்தி புலித்தோலை யிடையிற்றரித்து விடத்தைக்கண்டத்திலடக்கிக்கொண்டு உயர்ந்த விடபவாகனரூடராய் எழுந்தருளினர் அதுகண்டெனது மனமும் அவரைத்தொடர்ந்து போயினது எ-று.

அதிவ்வியநாயகனுக்கிலக்கியம்.

தலைவிசொல்லியது.

வட்டங்களைச்சீறிமணிக்கச்சைவெற்றிவனங்கலந்து
திடம்படைத்தோங்கியவென்முலையானையைச்சிக்கிரத்திற்
கடம்பனைப்பெற்றசுகவனர்வெற்பிற்கண்காட்டிநின்றேல்
றடம்புயத்தூணொடுபூட்டினல்லானமதந்தாழ்வரிதே.

(இ - ள்.) இயல்பாகிய யானை தன்னைக்கட்டியிருந்தவடத்தைக் கோபித்தறுத்துக் கழுத்திற்புனைந்த அழகியகயிற்றை யெறிந்து காட்டிற்பிரவேசிப்பதுபோல் மேலே தரித்த முத்துவடங்களைச்சீறி அழகிய இரவிக்கையைக்கிழியும்படி யெற்றி சந்தனக்கோலம் பொருந்தப்பெற்று வலிமைபடைத்துயர்ந்த எனது முலைகளென்னும் யானைகளை விரைவாக நான் கடப்பமாலிகையையு

டைய குமரக்கடவுளைப் பிள்ளையாகப்பெற்றருளிய சுகவனநாதர் மலைச்சாரிபில் என்னை அழைப்பதுபோற் கண்ணையிமைத்துச் சைகைகாட்டுகிற்கும் இந்த நாயகனது பெரியபுயங்களாகிய தூண்களோடு பூட்டினாலல்லது அவைகளின் மதந்தணிவது அரிது எ - று. (௯௫)

திவ்வியாதிவ்வியநாயகனுக்கிலக்கியம்.

தலைவிமனத்தொடுசொல்லியது.

வின்முனைராமனருச்சுனனாதியார்மேன்மையெலாம்
பன்முறைகேட்டிருக்கின்றேனன்னோர்பலபல நமிவன்
முன்மருவிறபகன்மின்மினிபோலவார் முகக்குறிப்பி
னன்மனமேயிசுகவனா வெற்பன்றெனதுடைடெய்வமே.

(இ - ள்.) வில்லாற்சவுரியமிருந்த ஸ்ரீராமன் அருச்சுனன் முதலானவர்களுடைய குணமேம்பாடுகளையெல்லாம் பலதடவை பெரியோர்களால் யான் கேட்டிருக்கின்றேன், அவ்வித நாயகர்கள் பலரும் இவனுக்கு முனனேவரிற் பகலின்முன் மினமினிபோல் ஒளிமழுங்குவாாகள் அன்றியும முகக்குறிப்பினாலே பார்க்குமிடத்து நல்லமனமே சுகவனநாதா மலைச்சாரயில் இந்த நாயகன் பூருவத்திற்றெய்வமே எ - று. (௯௬)

சு - வது மலர் முற்றும்.

நருமசசிவர்களின்பேதம்.

வேறு.

செப்பிவந்நபதிகளிடத்தினிநருமசசிவரொனசிலருண்டன்றே, ரொப்பிநின்றுகிரீடைகளுக்குதவிசெயவோராம விவரித்துணர்த்துங் காலைத், தப்பிகந்நபீடமர்த்தகரும் விடனுஞ்சேடகனுந தனைநேரில்லாத், துப்பிசைந்தவிதூடகனுமென்றுநாலவகையினராய்ததோற்றுவாரால்.

(இ - ள்.) இங்கேசொல்லிவந்த நாயகர்களிடத்தே நருமசசிவரொன்று சிலருண்டு; அவர்கள யாரோவெனற் சம்மதித்துநின்று கிரீடைகளுக்கு வேண்டிய சகாயஙகளைச் செயவோரசிலயாம்; இனனம விவரித்தறிவிககுங காலையில் அவர்கள் (குற்றநீங்கிய) பீடமாததகனென்றும் விடனென்றுஞ் சேடகனென்றுந் (தனக்கு நேரிலலாத மனப் பூரிப்பினையுடைய) விதூடகனென்றும் வகுக்கப்பட்ட நால்வகையோர்களாய வழங்குவார்கள எ-று(௯௭)

நருமசசிவர்களிலக்கணம்.

வருபீடமர்த்தகனின்மொழிகொடுநாயகிசினததைமறுபபோனின்பந்
தருகாமநூலில்வலலோனவிடனறலைவிதலைவர்களைசசமயநோக்கி
யொருசூழல்சேர்ப்பவன்சேடகனஙகவிகாரமன்னவுரைமறறுலுந்
தெருளாயபரிகாசஞ்செய்கிறபோன்விதூடகனாதெரியுங்காலே.

(இ - ள்.) யோசிக்கும் காலையில் மேல்வந்த பீடமர்த்தகனென்பவன் நாயகியினது கோபத்தை யினிய வசனங்களினாலே மாற்றுகின்றவன், விடனென்பவன் இன்பத்தைக்கொடுக்கும் காமசாஸ்திரத்தில் வல்லமை யுடையோன், சேடகனென்பவன் சமயம்பார்த்து தலைவி தலைவர்களை யோரிடத்திற் சேர்ப்பவன, விதூடக னென்பவன் அவயவ விகாரங்களினாலும் அப்படிப்பட்ட வார்த்தைகளினாலும் மற்றவைகளாலுந் தெளிவாகிய பரிகாசஞ் செய்வோனாகும் எ - று. (௩அ)

பீடமர்த்தகனுக்கிலக்கியம்.

தலைவியொடுசொல்லியது.

அடமனதாடிருந்தாலுஞ்சரிசொல்லமெலியவெளிமை
தொடர்வினையுமுனைவிடாதுடல்வாசிகந்தநீநாயகினகர்நுன்
விடவிழிசேயப்பெற்றேஙவர்பொருளேதபலன்மேலுமவன்
றிடவிரதத்தைவந்திக்கேன்சுகவனாசேலமின்னே.

(இ - ள்.) சுகவனநாதர் சேலமாநகரிலிருக்கின்ற பெண்ணே! யுனது மனத்தினூடே அடமிருந்தாலுஞ் சரிபட, வார்த்தைகள் எளிமையை யடைகின்றன நீ செய்யத்தொடங்கி யிருக்கும் எண்ணமானது உனைவிட்டு நீங்காமல் உனது தேகத்தில் வாசனையை யடைகின்றது, பொருந்திய கோபத்தினாலுனது விடம் போன்ற கண்களை சிவக்கப்பெற்ற நாயகனெவனோ அவன் பெற்றதேபேறு மேலு மவனுடைய வலிய தபசுக்குநான் வந்தனஞ்செய்கிறேன் எ - று. (௩௯)

விடனுக்கிலக்கியம்.

தலைவிக்குச்சொல்லியது.

மதிமலைமாருதமவந்தவண்டோதைநமவிந்ததவினை
பதிகுருதேசசுரஞ்சாவேச்சுரமபிறபயிரவமென்
றெதிரறுமாத்திரையாமதனபண்டிதனையதியுநின்
கொதிசினநோயுளதாமோசுகவனாருஞ்சணங்கே.

(இ - ள்.) சுகவனநாதர் மலைச்சாரலிலுள்ள நாயகியே,யிதோ சந்திரோதயமும பொதியமலைத் தென்றலும் அல்லது மோதுகின்ற தென்றலும் வந்தன, வண்டினுடைய கீதங்களெங்கும் நிறைந்தன, வினைகளையே பொருந்திய குருதேசச்சுரஞ் சர்வேச்சுரம் பின் பைரவமென்று சொல்லப்பட்ட வொப்பற்ற மாத்திரைகளாகக் கொண்டு மன்மதனாகிய வயித்தியன் இப்போது வந்தும் உனது கொதித்த கோபமாகிய வியாதி நிலைத்திருக்குமோ நிலையாது எ - று. (௪0)

சேடகனுக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

பருவமுகிலங்கதோவருகின்றதுபாரந்நுவக்குங்
கருவமயிலுமிதோவந்ததிங்கினிககாரியமென்
மருவளர்காவினமக்கென்றுநீர்தெரிவான்றனைப்போ
லொருவன்மெலவெளிசசென்றான்சுகவனருநிடமே.

(இ-ள்.) சுகவனநாதா தலத்தின்கண் ஒருவன் தன்னும் சமயந்தெரிந்தழைக்கப்பட்ட நாயகனும் நாயகியும் ஓரிடத்திற்குயா வப்போது நாயகனாகிய பருவகாலமேகம் அதோ அங்கே வருகின்றது அம்மேகத்தைப் பார்த்து மகிழும் நாயகியாகிய கருவமிருந்த மயிலும் இதோ இங்கேவந்தது வாசனைநிறைந்த விச்சோலையில் இனியென்ன நமக்கலுவலென்று சொல்லிக்கொண்டு தாகத்திற்குத் தண்ணீர தேடிப் பாரபபவனைப்போல் மெள்ளவெளியே சென்றான் எ-று. (அக)

விநாடகனுக்கிலக்கியம்.

கவிக்கூற்று.

நாயகிமேன்முந்திநாயகனபற்றிநயந்திழுத்துப
பாயணைநண்ணிமுலைகதசுசவிற்கருமபருவமநிற்
போயயல்வைகலறிசேவலசாதகமபோலொலிந்தா
னேயனொருவன்சுகவனாவெறபவனின்றருசவே.

(இ-ள்.) ஒரு நாயகனுனவன் றனது நாயகியை மேற்சேலை முந்தி பிடித்துப் பிரியமாயிழுத்துக்கொண்டுபோய் விசாலித்த படுக்கையைச் சார்ந்து அவளது தனத்திரவிக்கையை யவிழ்க்காநின்ற சமயத்திலே சுகவனநாதா மலைச்சார்பி லந்நாயகன் சும்மாநின்று பயப்படும்படிக் கோர் சிநேகன் அயலிற போயிருந்து விடியற்காலத்தை யறிகின்ற சேவலைப்போலவுஞ் சாதகப் புள்ளைபபோலவுஞ் சத்தித்தான் எ-று. (அஉ)

ரு - வது மலர் முற்றும்.

சாத்துவிகோதயவிலக்கணம்.

அன்னியரின்பதத்தைபிச்சிப்பதனுற்றேகத்தினிலுண்டாகுந்தோற்றந், தன்னிகருஞ்சாததுவிகோதயமதுதான்சிறுவேர்வைதம்பமேன்மேன், மன்னியெழும்புளகஞ்சொற்றடுமாற்றநடுக்கமொளி மழுங்கலபாட்டம், துன்னிவரும்பெருமயக்கமென்றிருநால்வகைத்துமுன்னூற்றுணிவிதாமே.

(இ - ள்.) தனக்குத் தானே நிராகிய சாத்துவிகோதய மென்பது அன்னியருடைய வின்பத்தை மனதி லிச்சிப்பதினாலே சரீரத்தி லுண்டாகின்ற தோற்றமேயாம், அது சிறுவேர்வையும், அசைவின்றி யிருத்தலும், அதிகமாய்ப் பொருந்தி யெழுகின்ற புளகாங்கிதமும், சொற்றமொற்றமும், நடுக்கமும், காந்தி குறைதலும், அழுகையும், நெருங்கி வருகின்ற பெருமயக்கமும் என் றெட்டுவகைப்படும், இது புராதனசிங்காரத்தின் றணிவாம் எ-று. (௪௩)

சாத்துவிகோதயத்துக் கிலக்கியம்.

சகியெண்ணியது.

சொற்றளர்வுங்கவுள்வெண்மையுங்கொங்கைத்துணைவெயர்வு
முற்றகண்ணீருமதரநடுக்குமுடற்பொடிப்பும்
கற்றநடைமந்தமுமனமூர்ச்சையுங்காணுவயிப
பொற்றொடிபார்த்தனள்போலுஞ்சுகவனர்பொற்பினையே.

(இ - ள்.) இந்த நாயகிக்கு வார்த்தையிலே தழுதழுப்பும், கபோலங்களிலே வெண்மையும், தனங்களிலே வேர்வையும், பொருந்திய கண்களிலே நீரும், அதரத்திலே நடுக்கமும், சரீரத்திலே புளகமும், படித்துள்ள நடையிலே மந்தமும், மனதிலே மூர்ச்சையுங் காணுகின்றன ஆதலாற் பொன்னாற்செய்த வளைகளையுடைய விவள் சுகவன நாதரது திருவழகைப் பார்த்தாள் போலும் எ - று. (௪௪)

சிங்காரபேதமும்

சம்போகசிங்காரத்திலக்கணமும்.

வேறு.

கலையுணர்ந்துசிங்காரஞ்சம்போகசிங்கார
மிலகுவிப்பிரலம்பசிங்காரமென்றிரண்டாம்
பலவிதக்கலவியும்புரிபொழுதெழுமபண்பே
மலைவகற்றுசம்போகசிங்காரமாயவழங்கும்.

(இ - ள்.) நூல்களாலறிவிக்கப்பட்ட சிங்காரமானது சம்போக சிங்காரமென்றும் (பிரகாசித்த) விப்பிரலம்ப சிங்காரமென்றும் இருவகைப்படும்; அவற்றுட்பலவித கிரீடைகளையுஞ் செய்கின்ற சமயத்திலுண்டாகுந் தன்மையே மயக்கத்தை நீக்குகின்ற சம்போக சிங்காரமென வழங்கும் எ - று. (௪௫)

சம்போகசிங்காரத்துக்கிலக்கியம்.

நாயகன்சொல்லியது.

கூர்மங்குலுங்கக்குலமணிநாகங்குழைந்தலுக்கப்
பார்விண்சலிந்தகுதிகொண்டவெற்பம்பரஞ்சுழன்ற
கார்மஞ்சலைந்தமதிபொங்கவெங்குங்கணமுதிர்ந்த
சீர்மன்சுகவனனூர்மானைநான்கொஞ்சிச்சேர்பொழுதே.

(இ - ள்.) செல்வமிகுபெற்ற சுகவனநாதா தலத்திலந்த நாயகியை நான் கொஞ்சிச்சேர்ந்தவச்சமயத்திலே அடியிலிருக்கும் ஆமைகுலுங்க, மாணிக்கத்தையுடையகுலநாகம் வருந்தியலுங்க, பூமியும் ஆகாயமும் அசைந்தன மலைகள் குதிகொண்டன, சமுத்திரங்கள சுழன்றன, கரியமேகங்களலைந்தன சந்திரன்பிரகாசிக்க நக்ஷத்திரங்களெங்குமுதிர்ந்தன எ - று.

இவைகளை முறையே புறவடியும் அல்குலும் பின்புறமும் இடையும் முலைகளும் கண்களும் கூந்தலும் முகமும் பிரிப்புமென்றறிக. (௪௬)

விப்ரலம்பசிங்காரத்தினிலக்கணம்.

பிரிவுபெற்றுழிக்கருத்தியன்றுமுறுபரிவுடையார்
பரியுமப்பருவத்தினிற்றோன்றியபான்மை
யுரியவிப்பிரலம்பசிங்காரமென்றுரைப்ப
ரரியபத்தெனுமவத்தையுமதனிலுண்டாமால்.

(இ - ள்.) தலைவிதலைவர்களிலொருவரை யொருவர் பிரிந்திருக்குமிடத்திற் றமதெண்ணமுடிவுபெறாத குறைத்திறால வருந்துமக்காலத்திற் றோன்றிய தன்மையே காமிகளுக்குரிய விப்ரலம்ப சிங்காரமென்று சொல்லுவராய்ந்தோர் அருமையான தசாவத்தைகளு மதிலுண்டாகும் எ - று. (௪எ)

விப்பிரலம்பசிங்காரத்துக்கிலக்கியம்.

கலித்துறை.

படர்மழைக்காரின்கண்டனன்வருமவழிபார்க்கவுயிர்
மிடறடுத்தன்றவன்முற்பறந்தாயினுமேவவவளு
ளடர்தனக்குன்றம்புயவிலைத்தோகையருகணிந்த
மடலுடைத்தாமசுகவனநாவலருசிமாலவியப்பே.

(இ - ள்) எங்கும்பரந்து வியாபித்த மழைமேகங்களை யாகாயத்திற் கண்டவுடனே நாயகன் வருகின்ற வழியைப்பார்க்கும் பொருட்டு விரைந்து பிராணனானது கண்டசமீபத்திலடுத்தது அன்றியும் அந்நாயகனுக்கெதிரே பறந்தாவது நாம்போய்ச் சேர்வோமென்று துணிந்தவைகளைப்போல நெருங்கி யவளது தனங்களாகிய மலைகள் தாமரையிலைகளாகிய இறகுகளைத் தமது பக்கங்களிற்றரித்தன ஆதலாலிதழ்களைப்படைத்த பூமாலையினையுடைய சுகவனநாதரது தலத்தின்கணந்த நாயகிகொண்டிருக்குமாசையானது விந்தையாகவிருந்தது எ - று. (௪அ)

தசாவத்தைகளின்பெயர்.

வேறு.

உரியவபிலாசைசிந்தைமிருதிகுணகீர்த்தனைபின்னுத்துவேகமுஞ், சரியில்விலபனந்தணியாவுன்மத்தம்வியாதிபொல்லாச்சடமையோடு, தெரியிலயமெனுமிவையீரைந்துதசாவத்தைகளாஞ்செயலவையாக, வரிசைவடநூற்படியேயவற்றினிலக்கணங்களையும்வகுத்துச்சொல்வாம்.

(இ - ள்.) உரித்தான அபிலாசையுஞ் சிந்தையும், மிருதியுங் குணகீர்த்தனையும் பின்பு உத்துவேகமும் (தப்பில்லாத) விலபனமும் (தணியாத) உன்மத்தமும் வியாதியும் (பொல்லாத) சடமையும் (தெரிகின்ற) இலயமும் என்று சொல்லப்பட்ட விப்பத்துமே விளங்கிய தசாவத்தைகளாகும் இனிமுறையாகவரிசையினையுடைய வடநூலின்படியே யவைகளினிலக்கணங்களையும் வகைப்படுத்திச் சொல்லுவோம் எ - று. (௪௯)

மேற்கூறிய தசாவத்தைகளின்.

இலக்கணம்.

கலவிதனையபிலாசையாயிரிமை காரியமெனுங்கருத்தேசிந்தை, குலவிமருவியசெயலைக்குறித்திடுதன்மிருதிப்பிரியர்குணவிசேடம், பலவுமுறைமுறையெடுத்துப்பகர்தல்குணகீர்த்தனையுட்பரிவுகூர்ந்து, விலகரியபிறபொருள்களையுற்றுறக்காமம்வெறுப்பதுத்துவேகமாமே.

(இ - ள்.) கலவியின்மேலுண்டாகும் விருப்பமே யபிலாசை, இவைசெய்வதாலிவை காரணமாமென்றெண்ணுவதே சிந்தை, முன்னமே கொஞ்சிக்கலந்த செய்கைகளை ஞாபகம் பண்ணுவதே மிருதி, பிரியர்களுடைய குணவிசேடங்கள் பலவற்றையும் அடிச்சடி யெடுத்துச்சொல்வதே குணகீர்த்தனை; காமத்தால மனவருத்த மிகுந்தமையால் விலக்குதற்கரிய பிறபதார்த்தங்களெல்லாவற்றையும் வெறுப்பதே உத்துவேகம் எ - று. (௫0)

இதுவுமது.

காதலரைக்குறித்துவருகற்பனைச்சொல்விலபனமுற்கண்டையென்றோர், பேதமுறுமதுசம்மவசாத்தியமாய்ப்பயனிலவாப்பேசும்வார்த்தை, யேதமனத்துயரிலுண்டாமிரதமுறுமுன்மத்தமதுவிரண்டாயத்தோன்றும், வாதையுடைக்காயகவலை யத்தமொடுவாசகவுன்மத்தமென்றே.

(இ - ள்.) பிரியர்களைக்குறித்து வருகின்ற கற்பனையுடைய சொற்களே விலபனம் அதிலுற்கண்டையென்றோர் பேதந்தோன்றும், அதுசம்மத ஆத்திரத்தால் பிரயோசனமொன்று மில்லாதவைகளாகப் பேசப்பட்டவார்த்தை

யேயாம், குற்றமான மனவருத்தத்தாலுண்டாகிய ப்ரமையே உன்மத்தம், அவ்வுன்மத்தங் காயகவுன்மத்தமென்றும் வாசகவுனமத்தமென்று மிரண்டு வகைப்படும் எ - று. (ருக)

இதுவுமது.

மதனசரமட்ரவந்தசந்தாபமெய்யிளைப்பிவ்வகைவியாதி
யதனமெனுமோகவிகாரத்தையன்றிமற்றொன்றுமறிவிலாத [லோ
விதமுடையவுயிருளதோர் வெவ்வவத்தை சடதையென்பர்மேலநூ
ரிதமதிலதிலயமதற்கிலக்கணமோடிலக்கியஞ்சொற்றிடவேண்டாவே.

(இ- ள்.) மன்மதபாணங்களடர்ந்து வாதிப்பதாலுண்டாகிய விரகசுரம் மேனியிளைப்பு முதலானவைகளே வியாதி அதிகமென்று சொல்லப் பட்ட மோகவிகாரங்களை மாத்திரமறிந்து மற்றொன்றையு மறியா திருக்குந் தன்மையைப் பெற்றவுயிரையுள்ளதாகிய கொடிய அவஸ்தையே சடதை யென்று சொல்லுமுயர்ந்தோர் இலயமென்பது இசைமுடையதன் முதலா லதற்கிலக்கணவிலக்கியங்கள் சொல்லவேண்டுவன வல்ல எ - று. (ருஉ

அபிலாசைக்கிலக்கியம்.

நாயகனசொல்லியது.

தாவிச்சுகவனர்வெறபின்மடந்தைசவுந்தரிய
வாவிக்குளேயென்மனம்பார்வைவிழுந்தனமற்றவற்றிற்
பாவித்தனிமனம்பாரத்தினிழ்ந்ததுபார்வைநொய்யதின்
மேவிச்சுழன்றுமிதந்தவந்தோவென்செய்வேனிதற்கே.

(இ - ள்.) சுகவனநாதர் வரைக்கணைந்த நாயகியினது சவுந்தரியமாகிய தடாகத்தினுள்ளே யெனதுமனமும் பார்வைகளுங் குதித்துச் சென்று விழுந்தன, அவைகளில் ஒப்பில்லாத பாவியாகிய மனம் பாரமானதால் அதிலே யமிழ்ந்திவிட்டது, பார்வைகள் இலேசானதால் அதின்மேலே பொருந்திச் சுழன்று மிதந்தன, நானிதற்கென்ன செய்வேன் எ - று. (ருங)

சிந்தைக்கிலக்கியம்.

நாயகனசொல்லியது.

இந்தப்புதருற்றடிக்கடிகூவுகின்றேன்குயில்போ
லந்தக்குமரிவசந்தபருவமடுத்ததென்னச
சொந்தத்தொடுதன்விழித்தாமமைமலர்ததோரணநோ
மூந்தப்புரிவள்சுகவனர்வெற்பின்முயன்றுநின்றே.

(இ - ள்.) நானிந்தப் புதர்வீட்டின் சமீபத்துற் றடிக்கடி குயில்போற் கூவுகிறேன்; அந்தநாயகியானவள் வசந்தகாலம் வந்ததென்று சுகவனநாதர் வரைக்கண் முயற்சியாக நின்று சொந்தத்துடனே தனது கண்களாகிய தாமமைப்பூத்தோரணத்தை நேரேமுந்தி பிரகாசிக்கச் செய்வள் எ-று. (ருச)

மிருதிக்கிலக்கியம்.
சகிசொல்லியது.

அருமைப்பதியைப்பிரிந்துமென்னேகண்ணருவிகொளா
ளொருநெட்டுயிர்ப்புமவிடாண்மெய்ப்புளகப்பொடிப்போடிருப்பள்
வெருவச்சமனைமுன்வென்றசுகவனநாதர்வரையிலன்னான்
மருவிசுகித்தபண்பெண்ணினள்போலுமிவ்வாறுநுதலே.

(இ - ள்.) முன் பயப்படும்படி யமனை யுதைத்துவென்ற சுகவனநாதர்வரைக்கண் ஒளிபொருந்திய நெற்றியினையுடைய இந்நாயகி அருமையான தனது நாயகனைப் பிரியப்பெற்றுங் கண்களில் அருவிபோல நீரைக் காட்டமாட்டாள் ஒரு பெருமூச்சேனும் விட்டிலாள், சரீரத்திற் பதிய புளகாங்கித முண்டாக விருக்கின்றாள், ஏதோ தெரியவில்லை, அந்நாயகன் கலந்து சுகித்த தன்மைகளை யெண்ணினாள் போலும் எ - று. (௫௫)

குணகோதகனைக்கிலக்கியம்.
நாயகனசொல்லியது.

மொய்யேரளகமடந்தைபொற்கும்பமுலைநெருடுங்
கையேகைநன்னலங்காணுங்கண்ணேகண்கலந்துருந்த
மெய்யேமெய்சொல்வினவுருசெவியேசெவிவேறுளவோ
மையேய்கிரீபசுகவனாவெற்பின்மதிவலாககே.

(இ - ள்.) வண்டினங்கள் பொருந்திய கூந்தலையுடைய அந்நாயகியினது சொர்ணகும்பத்தை யொத்த முலைகளை நெருடப்பெற்ற கைகளே கைகள், அவளது நல்ல அழகைப்பார்க்கப்பெற்ற கண்களே கண்கள், அவளை யாலிங்கனஞ்செய் தழுந்தபெற்ற தேகமே தேகம், அவளுடைய மிருது வசனங்களைக் கேட்கப்பெற்ற காதுகளே காதுகள், நீலகண்டத்தையுடைய சுகவனநாதர் வரைக்கட் புத்திமானகளுக்கு இவைகளைப் பார்க்கினும் வேறென்ன இருக்கின்றன எ - று. (௫௬)

உத்ரவேகத்துக்கிலக்கியம்.
நாயகிசொல்லியது.

ஆதிச்சுகவனர்வெற்பிடைமானனையானைநல்கி
யேதிசிதந்தோமதிபபாலையுந்தென்றலெனும்புலியும்
வாதிக்குமாலவலைவேள்வேடுனும்வரப்புரிந்தாய்
நீதிக்கிதோமுறைநீவாழிவேதநிரந்தரமே.

(இ - ள்.) ஒபிரமாவே முதற்கடவுளாகிய சுகவனநாதர் வரைக்கட் பெண்களென்னு மான்களை சிபடைத்தனையே அப்பாலெதை நினைந்து அம்மான்களுக் கிடையூறுண்டாகும்படி சந்திரோதயமாகிய பாலைவனத்தையுந தென்றலாகிய புலியையும் வருத்துகின்ற ஆசையாகிய வலையினையுடைய மன்மதனாகிய வேடனையும் வரச்செய்தாய், உனது நீதிக்கிதுவோ முறை, யெப்பொதும் நீவாழ்வாய் எ - று. (ருஎ)

உற்கண்டைக்கிலக்கியம்.

நாயகன்சொல்லியது.

அடிக்கடிவீதிவாராமற்றன்வீட்டி லடங்குவளோ
படித்தெவரென்னசொனாறோவின்றேலந்தப்பாவைமனம்
பிடித்திடலேதிருகாறுமெவளாறினிப்பேயமதவேள
வடிக்கணைவேதைநடபபேன்சுகவனமாலவெற்பினே.

(இ - ள்.) அந்தநாயகியானவள் அடிக்கடி வீதியிலே வாராம லிப்படி தன் வீட்டுக்குள்ளே யடங்கி யிருக்கமாட்டாளோ, ஏனிப்போ தப்படி யிருக்கின்றாள், யார் என்ன மித்திரங்களைப் படித்துப்படித்துச் சொன்னாளோ, இல்லாவிட்டால் அவளிதுவரை மனது பிடித்திருப்பதன்றோ சுகவனநாதர் பெரியவரையினிடத்துப் பைசாசுபோன்ற மன்மதனது கூரிய பாணங்களா லுண்டாகின்ற வருத்தத்தை நானினி யெப்படிக் கடப்பேன எ-று. (ருஅ)

காயகவுன்மத்தத்துக்கிலக்கியம்.

கவிகூற்று.

மிகமனைமேற்பளிங்கின்சுவர்தோன்றும்விதுநிழலபெண்
முகமெனவிந்தையநேகமறுளன்மொழிநதெதிரொரா
புகல்கிலதாற்சினம்போலுமிவடகென்றுபோயநனை சு
சுகவனரூர்த்தன்புளககைநீட்டிநதுழாவினனே.

(இ - ள்.) சுகவனநாதர் நகரின்கணொருநாயகனானவன் மேன்மாடத்திற் கட்டிய பளிங்குச்சுவரினூடே பிரதிபாகப பிரதிவிம்பித்த சந்திரனது நிழலை நாயகியினது முகமென்று நினைத்துப் பலவிதவேடிக்கை வார்த்தைகளைத் தான் சொல்லியும் அதற்கெதிர்மொழியது சொல்லாமையா லிவளுக்குக் கோபம்போலிருக்கின்றதென்று சமீபித்துத் தனது புளகாங்கிதந்தங்கிய கைகளைநீட்டி யதைத்தடவினான் எ - று. (ருக)

வாசகவுன்மத்தத்துக்கிலக்கியம்.

நாயகன்சொல்லியது.

திரும்பவலகண்சுகவனரூர்வஞ்சிசெவ்விநலம்
விரும்பிநடந்துட்பதிந்தனநெஞ்சைவிடுக்கவொணும்
வரும்பரிசோர்கிலேசசென்றாலவராவுயிர்மாத்திரமுண்
டாரும்பிரயோசனமென்னினிநிற்செய்பவநுகறகுமே.

(இ - ள்.) சென்ற பின்பு திரும்பிவர வல்லமையுடைய வென்று கண்கள் சுகவனநாதராற தலத்தின் சண்ந்த நாயகியின் சிரந்தவழகை விரும்பிச் சென்றதினுள்ளே பதிந்துவிட்டன, அப்பால் மனத்தை யனுப்பினேன் அதுவும் அவ்வாறே வருந்தனமையை யறியவில்லை, போனால் வருவதற்குச் சக்தியில்லாத வுயிர்மாத்திரமிப்போ தென்னிட மிருக்கின்றது, அவ்வுயிர் இந்தக்காரியத்திலருமையான வென்ன பிரயோசனத்தைச் செய்யக் கற்றுக்கொள்ளும் எ - று. (௬௦)

வியாஜிக்கிலக்கியம்.

தலைவனோடு சகிசொல்லியது.

பொருதறுவமபுகொணடுள்ளமபுகவினிபபூங்கொடியும
வருமதனு நசரியாவாரெனினுமமமாமதனு ந
கருவமதிகமதைப புயிவளடையாதிருககக
கருணைபுரிதிசுகவனர்வெற்பிளங்காதலனே.

(இ - ள்.) சுகவனநாதா வரைக்கண இளமைதங்கிய நாயகனே மன்மதனவன் போர்க்குரிய கருப்புவில்லையும் புட்பபாணங்களையும் ஏந்தி மனத்தில் வாசஞ்செய்வான, அதுபோலவே யிந்தநாயகியும் புருவங்களாகிய வில்லையும் கண்களாகிய பாணங்களையும் எந்திக்கொண்டு உனதுமனத்தில் வாசஞ்செய்வள், ஆதலால் இந்தநாயகியும் அந்தமன்மதனுஞ் சமானமாவார்கள், ஆயினும் அந்தப்பெருமைதங்கிய மன்மதனுக்குச் சரீரமில்லாமையொன் றதிகமாயிருக்கின்றது, அதையுமிந்த நாயகி பெற்றுக்கொள்ளாதிருக்கும்படி நீ தயவுசெய்வாய் எ - று. (௬௧)

சடதைக்கிலக்கியம்.

தலைவனுக்குச் சகிசொல்லியது.

விழிசுழலாதிமையாதசையாதுவிருமபுசெவ்வாய்
மொழிபயிலாதுவளொடிதணடைமுறையொலியா
தெழில்புனைபாவையொப்பாமேனுநின்பெயரோயுரைக்கிற்
கழிபுளகெய்துருசுகவனர்வெறபிளங்காரிகையே.

(இ - ள்.) சுகவனநாதர்வரைக்கண் நிலைமைதங்கிய அந்தநாயகியானவள் விரகமிகுதியால் கண்கள் சுழலாமலு மிமையாமலுஞ் சரீரமசையாமலும் வி

ரும்பத்தக்க சிவந்த வாய் வார்த்தகளைச்சொல்லாமலும், வளை கங்கணந் தண்டை முதலியவைகள் ஒலிக்காமலுமிருக்கப்பெற்று அழகைத்தரித்த சித்திரப்பாவைக்கே ஒப்பானாள், ஆயினும் உனதுபேரைச்சொன்ன வுடனேயிருந்ததேகபுளகாங்கிதத்தை யடைகின்றாள் எ - று. (கூஉ)

தெரிசனபேதமும்

அவற்றினிலக்கணமும்.

காதலர்தத்தமிற்காணுங்காட்சி தெரிசனமதுதான்கருதுங்காலே,யோதருமைசசொற்பனமுஞ சித்திரமுமெதார்த்தமுமென்றொரு மூன்றாகு, நோதலறக்கனவினிடைநோக்கலெழிறசித்திரத்திலேகககலுண்மை, யாதரவுற்றெதிரநோக்கலாமவைதாமுறையினென்பரறிந்துளோரே.

(இ - ள்.) அன்பர்களி லொருவரையொருவர் காணுங்காக்ஷியே தெரிசனமெனப்படும், அத்தெரிசனமானது நினைக்குங்காலையில் (சொல்லுதற்கரிய) சொப்பனதெரிசனமென்றும், சித்திரதெரிசனமென்றும்,எதார்த்ததெரிசனமென்றும் மூன்றுவகையாம்; (வருத்தந்தீரும்படி) கனவினிடத்துக்காண்பதே சொப்பனதெரிசனம், சித்திரத்திற் காண்பதே சித்திரதெரிசனம், உண்மையாக வெதிரிற்காண்பதே எதார்த்ததெரிசனமென்று சொல்லுவர், பலவுமறிந்துள பெரியோர்கள் எ - று. (கூகூ)

சொப்பனதெரிசனத்துக்கிலக்கியம்.

தலைவிசகியொடுசொல்லியது.

நேற்றிரவூடுதிருடனொருவனென்னேரடுத்து
மேற்றிகழ்பொற்பணியொன்றுந்தொடாதுவிளைவினுள்ளாய்த்
தோற்றிதயத்தைக்கவர்ந்தேகினனென்னசொல்லுவனயான்
கூற்றினைவென்றசுகவனர்வெற்பிளங்கோகிலமே.

(இ - ள்.) யமனை வெற்றிகொண்ட சுகவனநாதர் வரைக்கண் இளமைதங்கிய குயில்போலு மொழியினையுடைய சகியே! நேற்றிராத்திரியினூடே யொருதிருடன் எனக்கு நேராகவந்து என்மேலே பிரகாசிக்கின்ற சொர்ணாபரணங்க ளநேகமிருக்க அவைகளி லொன்றையுமெடாமல் உள்ளேயிருந்த மனத்தைத் திருடிக்கொண்டுபோயினன் நானென்னசெய்வேன் எ-று. (கூஎ)

(இ - ள்.) மூன்றுவித நாயகர்களிலக்கணமும் மூன்று பூவாக மற்றை நாயகர்களிலக்கணமொரு செழியபூவாக அன்பையுடைய நருமசசிவர்களி னிலக்கணமொருபூவாகவேனையபலவு மோரழகிய பூவாக சரியான விவ்வாறு மலர்களால் மூன்றுவது குச்சத்தை யலங்கரித்தனம், இப்படி மூன்று குச்சங்களாலே விருப்பமிகுந்த சிஙகாரரசமஞ்சரி யுலகம்புகழும்படி முடிவுபெற்றது எ - று. (சுள)

சு-வது மலர் முற்றும்.

## மூன்றுவது குச்சம்

முற்றும்.



## வாழி.

முகில்வாழிகடல்வாழி முனிவர்தவம்வாழிமறைமுதுநூல்வாழி
யகிலாதிபுவனமுழுவதும்வாழிதமிழ்வாழியமிழ்தூர்வாழி
சிகிகூவுமலாசசோலைசேலநகர்வாழிபெருஞ்செல்வம்வாழி
மகிழ்கூர்சொர்ணம்பிகைத்தாய்வாழிசுகவனநாதர்வாழிமாதோ.

## சிங்கார ரசமஞ்சரி

முற்றிற்று.

ஆக செய்யுள் உ௱௦.



ஸ்ரீசற்குருப்யோநம:

# வாசுதேவமனனம்

என்று வழங்குகிற

# விவேகசாரம்.

இஃது,

வசனரூபமாய் சகலவேதாந்த சாஸ்திரார்த்தங்களுமடங்கி

யிருக்கின்றமையால் முமுட்சுக்களிற் கற்றவர்களன்றி

மற்றவர்களும் எளிதிலறிந்து மோட்சானந்தத்

தைப் பெறும்படியான உபகாரார்த்

தத்தைக் கருதி.

காஞ்சீபுரம்

**ம-ள-ள-ஸ்ரீ, வா. சரவணமுத்துப்பிள்ளையவர்கள்**

சங்கையுத்தாரணமாகிய பிழையறப் பரி

சோதித்து அச்சிட்டுத் தரவேண்டு

மென்று கேட்டுக்கொண்டபடி,

---

பாரிப்பாக்கம்

**முனியப்ப முதலியாரால்**

அசிஸ்டெண்ட் பிர[illegible],

**ஞானசுந்தரபிரம்மம் அவர்களால்**

சென்னை,

**வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்**

பதிப்பிக்கப்பட்டது.

---

1914.

இதன் விலை ரூபா—க.